ஸ்ரீ

ஸம்யமனீபுரம் ஹைகோர்ட்

வேதாந்த விசாரணை

# ஸிவில் ஸூட்

5-வது இஷ்யு.

---

ஸ்ரீமத் வைதிக வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபநாசார்ய

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி குணகணாலங்க்ருத

ஸ்ரீமதுத்தராதிமடாதீஶ

ஸ்ரீமத் ஸத்யத்யானதீர்த்த ஸ்ரீ பாதங்களவர்களால்

இயற்றப்பட்டு

எஸ். கிருஷ்ணசார்யரால்

மொழிபெயர்க்கப்பட்டது.



---

பத்மஸரோவரம் (திருச்சானூர்)

ஸ்ரீமன் மத்வ ஸித்தாந்தபிவ்ருத்திகாரிணீ சபையாரால்

ப்ரசுரிக்கப்பட்டது.

1934.

ஸ்ரீ

ஸம்யமனீபுரம் ஹைகோர்ட்

வேதாந்த விசாரணை

# ஸிவில் ஸூட்

5-வது இஷ்யு.

---

ஸ்ரீமத் வைதிக வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபனாசார்ய

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி குணகணாலங்க்ருத

ஸ்ரீமதுத்தராதிமடாதீச

ஸ்ரீமத் ஸத்யத்யான தீர்த்த ஸ்ரீபாதங்களவர்களால்

இயற்றப்பட்டு

எஸ். கிருஷ்ணாசார்யரால்

மொழிபெயர்க்கப்பட்டது.

---

பத்மஸரோவரம் (திருச்சானூர்)

ஸ்ரீமன் மத்வ ஸித்தாந்தபிவ்ருத்திகாரிணீ சபையாரால்

ப்ரசுரிக்கப்பட்டது.

1934.

# அட்டவணை.

| பொருள். | பக்கம். |
|---|---|
| முன்னுரை ..... ..... ..... | i—ii. |

## ஜட்ஜ்மெண்ட் பாகம்.

| | |
|---|---|
| தாவா முதலியவைகள் ..... ..... ..... | 1 |
| அத்வைதமதம் ஶூன்யவாதி பௌத்த மதமே என்கிற தீர்மானம் ..... ..... ..... | 7 |
| வேதம் முதலிய ஜகத்தின் விஷயத்தில் தீர்மானம் ..... | 16 |
| விஞ்ஞானவாதி பௌத்தாத்வைதமத ஸாம்ய நிர்ணயம் | 22 |
| டிக்ரீ ..... ..... ..... ..... | 26 |

## விசாரணை பாகம்.

| | |
|---|---|
| வாதி விசாரணை ..... ..... ..... | 1 |
| ப்ரதிவாதி விசாரணை ..... ..... ..... | 2 |
| ஶூன்யவாதி பௌத்தாத்வைதமத ஸாம்ய விசாரணை | 21 |
| விஞ்ஞானவாதி பௌத்தாத்வைதமத ஸாம்ய விசாரணை | 39 |
| ஶூன்யவாதி பௌத்தாத்வைதமத ஸாம்ய விஷயத்தில் வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட் ..... ..... | 56 |
| ,, ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட் ..... | 57 |
| ,, வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட் ..... ..... | 59 |
| விஞ்ஞானவாதி பௌத்தாத்வைதமத ஸாம்யவிஷயத்தில் வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட் ..... ..... | 64 |
| ,, ப்ரதிவாதிவக்கீல் ஆர்க்யுமெண்ட் ..... ..... | 66 |
| ,, வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட் ..... ..... | 67 |

श्री



* * * * * * * *

सत्यध्यानसुतीर्थ तावकमिदं चित्रं चरित्रं विभो
काव्यालापविवेचिनोऽपि कवयश्शक्ता न वक्तुं धिया ।
तावद्ब्रह्मभवप्रपञ्चविषये सञ्चिन्तयन्तो मुदा
ह्यौपम्यानवबोधहीनमतिताविर्भावभाजो नृणाम् ॥ १० ॥

वादे च सार्धं न हि तेन कोऽपि
शक्तो बुधस्स्यादिति मे मनीषा ।
विस्मेरतामाप यतः स धीमान्
कुमारमिश्रशिवशब्दपूर्वः ॥ ११ ॥

"काशीस्थ राजकीयविद्यालये धर्मशास्त्रप्रधानाध्यापकस्य
महादेवशास्त्रिणः"

श्रीः

श्रीमद्दिग्विजयरामोविजयते ॥



# முன்னுரை.

---

"सुखमेव मेस्याद्दुःखं मनागपि माभूत्"

'ஸுகமே ஸர்வகாலத்திலும் நமக்கு இருக்கவேண்டும். துக்கம் எப்பொழுதும் வரக்கூடாது' என்று எல்லா ப்ராணிகளாலும் அபேக்ஷிக்கப்படும் துக்கமற்ற ஸுகம் மோக்ஷத்திலேயே கிடைக்கக்கூடியது. அந்த மோக்ஷத்திற்கு ஸ்ரீபரமாத்மாவின் ப்ரஸாதமே முக்ய காரணம். அந்த ப்ரஸாதத்திற்கு தன்னிடத்திலும் தன்னைச் சேர்ந்தவர்களிடத்திலும் தான் செய்துவரும் சினேகத்தைவிட பலமடங்கு அதிகமானதும், எவ்வளவு தடைகள் வந்தபோதிலும் தடுக்கப்படாததாயும், நிஷ்காமமானதாயு மிருக்கும் சினேக ரூபமான பக்தியே காரணம். அத்தகைய பக்தி உண்டாவதற்கு பரமாத்மாவின் ஸர்வஞ்ஞத்வம், ஸத்ய ஜகத்கர்த்ருத்வம், பாலகத்வம், ஜீவஜடாத்மக ப்ரபஞ்ச பின்னத்வம் முதலிய அநேக குணங்களின் அபரோக்ஷ ஞானம் காரணம். அத்தகைய அபரோக்ஷ ஞானம் வேதாதி ஶாஸ்த்ரங்களை ஶ்ரவணம் செய்து, நாநாவித துர்மதங்களைக் கேழ்ப்பதினால் உண்டாயிருக்கும் ஸம்ஶயங்களை ப்ரஹ்மமீமாம்ஸா ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கும் யுக்திகளினால் போக்கடித்துக்கொண்டு, வேதங்களினால் அந்த தத்வங்களின் நிச்சய ஞானத்தை யடைந்தபிறகு, அச்சாஸ்த்ரங்களினால் நிர்ணயிக்கப்பட்ட பகவானிட குணங்களின் த்யானத்தினாலுண்டாகிறது. அத்தகைய த்யானத்திற்கு காரணமான ஶாஸ்த்ர ஶ்ரவணாதிகள்—ப்ராஹ்மணாதிவர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள் இவைகளுக்கு வேதங்களினால் விஹிதமான ஸ்நான ஸந்த்யா வேதாத்யயன யஞ்ஞ ஜப தேவதார்ச்சன கங்காதி தீர்த்த ஸ்நானம் முதலியவைகளைச்செய்து, அவைகளால் அந்த:கரணசுத்தியைச் சம்பாதித்துக்கொண்டிருக்கும் மனிதனுக்கு உண்டாகிறதென்று வேதம், ஸூத்ரம், கீதை இவைகளில் கூறப்பட்டிருக்கிறது.

இப்படியிருந்தபோதிலும்—கௌடபாதாசார்யர், சங்கராசார்யர் முதலிய அத்வைதிகள்—வேதம், ஸூத்ரம் கீதை இவைகளுக்கு வேறு அர்த்தங்களைக் கல்பித்து, ப்ராஹ்மணாதிவர்ணம் முதலிய ஜகத்து மித்யை, (பொய்), ஜீவன் ப்ரஹ்மமே, ப்ரஹ்மம் ஸர்வஞ்ஞத்வாதி குணங்களுடன் கூடினதல்ல. ப்ரஹ்மம் (பௌத்தர்களின் சூன்யத்தைப்போலவும், விஞ்ஞானத்தைப்போலவும்) நிர்விசேஷமானது (ஸகலதர்ம ரஹிதமானது). வேதம் அப்ரமாணமென்று சொல்லும் பௌத்த மதத்திற்கே அத்வைதமதமென்று பெயரிட்டு, வைதிகமதத்தைப்போல் தோன்றச்செய்து, ஸஜ்ஜனர்களுக்கு ப்ரமையுண்டாக்கி அதோகதிக்கு அழைத்துச் சென்றுக்கொண்டிருக்க—**'मध्वो वो नाम मारुतं यजत्राः' (ऋ.)** இது முதலிய வேதங்களினால் வாயு பகவானின் அவதாரரென்று ப்ரசித்தரான ஸ்ரீமான் மத்வாசார்யர், மற்றும்

ஸ்ரீபத்மனுபதீர்த்தர், ஸ்ரீமத் ஜயதீர்த்தர், ஸ்ரீ வ்யாஸராஜர், ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர், விஜயீந்த்ர தீர்த்தர், ராகவேந்திர தீர்த்தர், ஸ்ரீமத் வித்யாதீஸதீர்த்தர், ஸ்ரீ ஸத்ய நாததீர்த்தர், பாண்டுரங்கி, ஆனந்தாசார்யர், கேசவாசார்யர், யாதவாசார்யர், வ்யாஸராமாசார்யர் முதலிய மஹான்கள் அநேக நூல்களை இயற்றி அவைகளால் அந்த அத்வைதமதத்தைக்கண்டித்து, த்வைதமதத்தை ஸ்தாபித்திருக்கின்றனர். அந்த நூல்கள் ஸம்ஸ்க்ருத பாஷையில் மிகவும் ப்ரௌடமாகவும் விஷயங்கள் ஆங்காங்கு விக்ஷிப்தமாயுள்ளதாயும் இருக்கின்றன. அந்த நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் ஸஜ்ஜனர்களுக்கு ஸுலபமாய்த் தெரிவதற்காக, ஸ்ரீமதுத்தராதிமடாதிபதிகளான ஸ்ரீமத் ஸத்யத்யான தீர்த்த ஸ்ரீபாதங்களவர்கள் எளிய ஸம்ஸ்க்ருதபாஷையில் ஆங்காங்கு சொல்லப்பட்டுள்ள எல்லாவிஷயங்களையும் ஒன்றுகூட்டி அநேக நூல்களை இயற்றியிருப்பதேயன்றி, இக்காலத்தில் நடக்கும் கோர்ட் விசாரணை ரீதியில் வாதிதாவாமனு, பிரதிவாதி ஸ்டேட்மெண்டு, இஷ்யூ, வாதிப்ரதிவாதிகளின் விசாரணை, க்ராஸ், ரீக்ராஸ், வாதிப்ரதிவாதி வக்கீல்களின் ஆர்க்யுமெண்ட், ஜட்ஜ்மெண்ட் இவைகளுடன் கூடிய ஓர் நூலையும் இயற்றி அத்வைதமதத்தைக் கண்டித்திருக்கிறார்.

அந்த நூலில் முதல் பாகத்தில்—தாவா ரெஸ்ஜுடிகேடா (மின் விசாரம் நடந்திருப்பதால் மறுபடியும் கோர்ட்டாருக்கு விசாரிக்க அதிகாரமில்லாதது,) அல்லவென்றும், இரண்டாவதுபாகத்தில்-ப்ராஹ்மணவர்ணம் முதலிய ஜகத்து ஸத்யமானது, மித்யை (முக்காலத்திலுமில்லாதது) அல்லவென்றும்; மூன்றாவது பாகத்தில்—ப்ரஹ்மம் ஜீவனைவிட வேறானது (பின்னம்) ஜீவரூபமல்ல என்றும்; நாலாவது பாகத்தில்—ப்ரஹ்மம் ஸர்வஞ்ஞத்வாதி அநேக குணங்களினால் பூர்ணமானது, நிர்குணமானதல்ல வென்றும்; ஐந்தாவது பாகத்தில்—அத்வைதமதம் பௌத்த மதமே என்றும் பிரதிவாதிகளின் ஆதாரங்களினாலேயே தெளிவாய் விவரிக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய நூலை இக்காலத்தில் எல்லா லௌகிக வைதிக ஸஜ்ஜனர்களுக்கும் ஸுலபமாய்த் தெரிவதற்காக கர்னாடக, ஆந்த்ர, திராவிட, மகாராஷ்ட்ர, ஹிந்தி முதலிய பாஷைகளில் மொழிபெயர்ப்பித்து, ஸ்ரீமன் மத்வசித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபையோரால் ப்ரசுரிக்கப்பட்டிருக்கிறது. இந்நூலில் எழுதப்பட்டிருக்கும் விஷயங்கள் ஶாஸ்த்ர விசாரரூபமானதால் கடினமாயிருப்பதின் பொருட்டு "वक्तव्यं ब्रह्म गुरुणा चतुर्वारमथापिवा" வேதார்த்தங்களை உபாத்யாயர்கள் பலதடவைகள் சொல்லவேண்டும் என்கிற ஆசார்யரின் உத்திரவின்படிக்கு ஸஜ்ஜனர்களுக்கு ஸுலபமாய்த்தெரிவதற்காக அநேக இடங்களில் அநேக தடவைகள் அநேகப்பிரகாரமாய் எழுதப்பட்டிருக்கிறது. இத்தகைய க்ரந்தத்தை ஸஜ்ஜனர்கள் நன்றாய் விசாரம் செய்து, ப்ரஹ்மத்தின் ஸர்வஞ்ஞத்வம், ஸத்யமானஜகத் ஸ்ரஷ்ட்ருத்வம், ஜீவஜடாத்மக ப்ரபஞ்ச விலக்ஷணத்வம் முதலிய மஹாமாஹாத்ம்யங்களை அறிந்துகொண்டு, பரமாத்மாவின் அனுக்ரஹத்தினால் ப்ரக்ருதி பந்தத்தினின்றும் முக்தர்களாய் நித்ய ஸுகானுபவ ரூபமோக்ஷத்தை யடையத் தகுந்தது.

பத்மஸரோவரம்,
ஸ்ரீ பாவஸம்.
சித்திரைமீ 1௳

கௌரவ கார்யதர்சி,
ஸ்ரீமன் மத்வசித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபா.

ஸ்ரீ

# ஸம்யமனீபுரம் ஹைகோர்ட்

28-வது கலியுகம், சாலிவாஹனசகம் 1849-ல்

சீப் ஜஸ்டிஸ்

S. தர்மராஜ் H. B. அவர்கள் சமுகத்தில் நடந்த

## வேதாந்த விசாரணை

# ஸிவில் ஸூட்

## O. S. No. 564 of 1921.

5-வது இஷ்யூவின்

## ஜட்ஜ்மெண்ட்.

| வாதி | பிரதிவாதி. |
|---|---|
| விஷ்ணுதாஸாசார்யர். | கங்காதரசாஸ்திரிகள். |
| வாதி வக்கீல். | பிரதிவாதி வக்கீல். |
| மாதவதாஸ். P. B. D. | ஹரிஹரசர்மா. P. B. S. |

வாதியின் தாவா என்னவென்றால்:—

(1) வாதியினால் வைதிக ஆஸ்திகர்களான எல்லா ஜனங்களிட பிரதிநிதியாக கோர்ட்டார் உத்திரவைப்பெற்று இந்த தாவா செய்யப்பட்டது.

(2) மேற் சொல்லப்பட்ட கங்காதரஶாஸ்திரிகளே அத்வைதிகளெல்லோரிட பிரதிநிதியாக கோர்ட்டார் உத்திரவைப்பெற்று இந்த தாவாவில் பிரதிவாதியாக சேர்க்கப்பட்டிருக்கிறது.

(3) வாதிகள் ஆஸ்திகமான வைதிகமதத்தில்சேர்ந்தவர்கள்.

(4) இவ்வைதிகமத தத்வங்கள்:—

(a) ப்ராஹ்மண்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத் யாச்ரமங்கள், யஞ்ஞாதிக்ரியைகள், தேவதைகள், வேதங்கள், கங்காதி தீர்த்தங்கள், ஸ்வர்க்காதி பரலோகங்கள், இப்பூலோகம் முதலான எல்லா ஜகத்தும் ஸத்யமானவைகள்.

(b) விஷ்ணு ஸர்வோத்தமன், ஸர்வஞ்ஞன், ஸர்வகர்த்தா, அனந்த கல்யாண குணபூர்ணன்.

(c) பரமாத்மா ஜீவனைக்காட்டிலும் வேறானவன் (பின்னன்).

(d) "பரமாத்மா ஜீவனைக்காட்டிலும் பின்னன், ஸர்வோத்தமன், ஸர்வகர்த்தா" என்கிற ஞானமே மோக்ஷஸாதனம்.

(5) இத் தத்வங்கள்–வேதங்கள், வேதார்த்த நிர்ணயகமான ப்ரஹ்மஸூத்ரங்கள், பகவத்கீதை இவைகளில் சொல்லப்பட்டிருப்பதால் வைதிக ஜனங்களெல்லோரும் அத்தத்வங்களை அங்கீகரிப்பதற்கு உடன்பட்டிருக்கிறார்கள்.

(6) இவ்வைதிக மதம் அனாதிகாலமாக வந்துக்கொண்டிருக்கிறது.

(7) தத்வமிப்படியிருக்க—கௌடபாதாசார்யரும், அவரிட, பரமசிஷ்யரான சங்கராசார்யரும், வேதம், ப்ரஹ்மஸூத்ரம், பகவத்கீதை இவைகளுக்கு வேறு அர்த்தத்தைக்கல்பித்து, விஞ்ஞானவாதிகளான பௌத்தரிட மதத்தையும், ஶூன்யவாதிகளான பௌத்தரிட மதத்தையும் வைதிகமதமாகத் தோன்றும்படிக்குச்செய்து, ஜனங்களை மோசம் செய்து, வைதிக தத்வங்களுக்கு விருத்தமான தத்வங்களை போதித்துவருகிறார்கள்.

இப்படிச் செய்கிறது புராதன சிக்ஷா நியமம் (பகவத்கீதா) 16 வது ஸெக்ஷனில் (அத்தியாயத்தில்) சொல்லப்பட்ட சிக்ஷைக்குத் தகுந்த குற்றமாயிருக்கிறது.

(8) பிரதிவாதிகள் போதிப்ப தென்ன வென்றால்:—

(a) விஷ்ணு (பரப்ரஹ்மம்) ஸர்வோத்தமனல்ல, ஸர்வஞ்ஞனல்ல, ஸர்வ கர்த்தா அல்ல, அனந்த கல்யாண குண பூர்ணனல்ல, அவன் ஸகல தர்மரஹிதன்.

(b) 4-வது a பாராவில் சொல்லிய ப்ராஹ்மணவர்ணாதி எல்லா ஜகத்தும் மித்யை என்றால் மூன்று காலங்களிலும் இல்லாதது.

(c) பரமாத்மா ஜீவனைக்காட்டிலும் பின்னனல்ல.

(d) "பரமாத்மா ஜீவனைக்காட்டிலும் பின்னன், ஸர்வோத்த மன்" என்கிற ஞானம் மோக்ஷ ஸாதனமல்ல. "அஹம் ப்ரஹ் மாஸ்மி (நானே ப்ரஹ்மம்)" என்கிற ஞானமே மோக்ஷஸாதனம்.

(9) பிரதிவாதி—வேதம் கீதை ஸூத்ரம் இவைகளில் கூறப் பட்டுள்ள தத்வங்களை அதற்கு விருத்தமாக தெரிந்துக்கொண்டு, "நஷ்டாத்மானோல்பபுத்தய:; ப்ரபவந்த்யுக்ர கர்மாண: க்ஷயாய ஜகதோஹிதா:" (கீதை 16-9)ல் சொல்லியவாறு தாங்கள் அதோ கதியை அடைவதல்லாமல் இதரஸஜ்ஜனர்களையும் ஆஸ்தீகமதத்தி னின்றும் விடுவித்து, அவைதிக மதத்தை ஆஶ்ரயிக்கச் செய்து அதோகதியை யடைவிக்கிறார்கள்.

ஆகையால் கோர்ட்டார் ஸஜ்ஜனங்களின் நன்மைக்காக கீழ்க் கண்டவாறு தீர்மானம் செய்யவேணுமாய்க் கோருகிறோம்.

(a) பரப்ரஹ்மம் ஜீவனைக்காட்டிலும் வேறானது, ஸர்வோத் தமமானது, ப்ராஹ்மண்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ர மங்கள், வேதம், யஞ்ஞம், தேவதைகள், கங்காதி தீர்த்தங்கள் முதலிய ஜகத்து நிஜமானவைகள், மித்யை அல்ல. இவைகளே வைதிக மதத்தின் தத்வங்கள்.

பிரதிவாதியால் சொல்லப்பட்ட "ப்ரஹ்மம் நிற்குணம், மற் றும் அது ஜீவனுடன் அபின்னமானது. ப்ராஹ்மணவர்ணாதி ஜகத்து பொய் (மித்யை)" என்கிற இவைகள் வைதிகமதத்தின் தத்வங்கள் அல்ல.

(b) வேதம், ப்ரஹ்மஸூத்ரம், கீதை இவைகளுக்கு விருத் தமான அர்த்தங்களைக் கல்பித்து "ஜகத்து மித்யை, ப்ரஹ்மம் நிற்குணம்" இது முதலிய பிரதிவாதிகளின் உபதேசம் ஶாஸ்த்ரங் களுக்கு விருத்தமானவைகள் என்று தீர்மானிக்கவேணும்.

(c) மற்றும் கோர்ட்டாருக்கு ஏதேது யுக்தமென்று தோன்று கிறதோ அதுகளையும் தீர்மானிக்கக் கோருகிறோம்.

(10) கோர்ட்டார் இவ்விதமாகச் செய்யாவிடில் ஜனங்கள் மிகவும் கஷ்டங்களை அடைவார்கள்.

இவ்விதமாக வாதியினுல் 25-3-1921ல் மாதவதாஸ் வக்கீல் இவர்கள் முகாந்தரமாய் தாவா தாகல் செய்யப்பட்டு, ப்ரமாண பத்திரிகையும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

பிறகு ப்ரதிவாதிக்கு கோர்ட்டாரால் ஸம்மன் ஜாரி செய்யப் பட்டு, ப்ரதிவாதியால் 30-3-1921ல் கீழ்க்கண்டவாரு ஸ்டேட் மெண்டும் தாக்கல் செய்யப்பட்டது.

---

## பிரதிவாதி ஸ்டேட்மெண்டு.

---

(1) இந்த வாதியினுல் கொடுக்கப்பட்ட தாவாவில் சொல்லப் பட்ட விஷயங்கள் பொய்.

(2) வாதிமனு 4-வது பாராவில் சொல்லிய தத்வங்கள் வேதங்களிலும், ஸூத்ரங்களிலும், கீதையிலும் சொல்லப்பட் டிருப்பினும், வேதங்களுக்காவது, கீதைக்காவது, ப்ரஹ்மஸூத் ரங்களுக்காவது அத்தத்வங்களை அறிவிப்பதில் தாத்பர்யமில்லை. ஆகையால் அத்தத்வங்கள் வைதிகங்களல்ல, மற்றும் பொய்யா னவை.

(3) வாதியின் மதம் அநாதிகாலத்தினின்றும் வருவதல்ல.

(4) வாதி 4-வது பாராவில் சொல்லிய விஷயங்கள் வெரும் பொய்.

(a) எங்களிட அத்வைத மதமே வைதிகமதம்.

(b) அத்வைதமதம் பௌத்தமதமென்று சொல்லுவது சரி யல்ல.

(c) நாங்கள் சொல்லுவதே வேதார்த்தம்.

(5) அத்வைதமத தத்வங்கள்:—

(a) ப்ரஹ்மத்தை விட வேறான ப்ராஹ்மண்யாதி வர்ணங் கள், தேவதைகள், ஸந்தியாவந்தனாதி கர்மங்கள் முதலான ஜகத்து ஸ்வப்னத்தைப் போல் பொய்.

(b) ப்ரஹ்மம் நிற்குணம் (ஸகலதர்மரஹிதம்)

(c) ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே.

(d) 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்கிற ஞானமே மோக்ஷஸாதனம்.

(6) இவ்விஷயம் முதலே தீர்மானிக்கப்பட்டிருப்பதால், மருபடியும் விசாரிப்பதற்கு கோர்ட்டாருக்கு அதிகாரமில்லை (Res-judicata.)

(7) வாதியினால் 9-வது பாராவில் சொல்லப்பட்ட விஷயங்கள் பொய். எங்களிட அத்வைத மதத்தை ஆஶ்ரயித்து நாங்களும் நஷ்டப்படவில்லை. மற்றும், இதை ஆஶ்ரயித்து வேறுயாரும் நஷ்டமடையவில்லை.

இக்காரணங்களினால் கோர்ட்டார் வாதிக்கு எவ்வித அனுகூலத்தையும் செய்யாமல் அவரிட மனுவை தள்ளிவிட வேணுமாக ப்ரார்த்திக்கிறோம்.

பிரதிவாதி இவ்விதமான ஸ்டேட்மெண்டை வக்கீல் ஹரிஹர சர்மா மூலமாக தாகல் செய்வித்து, ப்ரமாணமும் செய்திருக்கிறார். அதற்குமேல் கோர்ட்டார் வாதி பிரதிவாதி வக்கீல்களின் முன்னிலையில் கீழ்கண்ட இஷ்யூகளை எடுத்திருக்கிறார்கள்.

---

## இஷ்யூ ISSUE.

---

(1) ரெஸ்ஜுடிகேடா (Resjudicata) ஆகிறதா இல்லையா? [இவ் விஷயம் முன் தீர்மானிக்கப்பட்டிருப்பதினால் மறுபடியும் விசாரணை செய்ய கோர்ட்டாருக்கு அதிகார்முண்டா இல்லையா?]

(2) (a) ப்ராஹ்மண்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள் முதலிய பிரபஞ்சம் நிஜமா, பொய்யா?

(b) ஸ்வப்னம் ஸத்யமா, மித்யையா?

(3) பரப்ரஹ்மம் ஜீவனைவிட வேறானதா, அல்லவா?

(4) பரப்ரஹ்மம்-ஸர்வஞ்ஞத்வம், ஸர்வகர்த்ருத்வம் முதலான ஸகல கல்யாண குணபூர்ணமா அல்லவா?

(5) (a) அத்வைத மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் பேத முண்டா இல்லையா?

(b) அத்வைதமதம் வைதிகமதமா அல்லவா?

---

முதல் இஷ்யூ (ரெஸ்ஜுடிகேடா) விசாரணை 3-7-1921ல் வாதி பிரதிவாதி வக்கீல்களின் ஆர்க்யுமெண்ட் நடந்து, **இந்த தாவா ரெஸ்ஜுடிகேடா அல்ல,** என்று கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

---

(a) ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள் முதலிய எல்லா ஜகத்து ஸத்யமா (நிஜமானதா) அல்லது மித்யையா (பொய்யா)?

(b) ஸ்வப்னத்தில் காணப்படும் பதார்த்தங்கள் நிஜமானவைகளா, பொய்யானவைகளா என்கிற இரண்டாவது இஷ்யூ விசாரணை செய்து—

ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், யஞ்ஞாதி க்ரியைகள், தேவதைகள், வேதம், கங்காதி தீர்த்தங்கள், ஸ்வர்க்காதி லோகங்கள், இந்த லோகம் முதலிய **எல்லா ஜகத்தும் ஸத்யமானது** (நிஜமானது). **மித்யை அல்ல** (பொய் = முக்காலத்திலுமில்லாதது அல்ல,) மற்றும் ஸ்வாப்ன பதார்த்தங்களும் நிஜமானவைகள் பொய்யல்ல என்று கோர்ட்டாரால் 28-8-1928ல் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

---

பரப்ரஹ்மம் ஜீவனைவிட பின்னமா? அல்லது அபின்னமா? (ஜீவப்ராஹ்மங்களுக்கு பேதமா அல்லது ஐக்கியமா) என்கிற மூன்றாவது இஷ்யூவை விசாரணை செய்து **"ப்ரஹ்மம் ஜீவனைக் காட்டிலும் வேறானது, ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதமுண்டு ஐக்யமில்லை"**

என்று 20-10-1928ல் கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

பரப்ரஹ்மம்—ஸர்வஞ்ஞத்வம், ஸர்வஶக்திமத்வம், ஜகத்கர்த்ருத்வம் முதலிய குணங்களினுல் கூடினதா அல்லவா (நிர்குணமா) என்கிற நாலாவது இஷ்யூவின் விசாரணை நடந்து—"பரப்ரஹ்மம்-ஸர்வஞ்ஞத்வம், ஸர்வஶக்திமத்வம், ஜகத்கர்த்ருத்வம் முதலிய பாரமார்த்திக ஸத்யமான குணங்களுடன் கூடினது, ஸகல தர்ம ரஹிதமல்ல" என்று 21-12-1928ல் கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

அத்வைதமதம் பௌத்தமதத்தைவிட வேருனதா, அல்லது ஒன்ரு; அத்வைதமதம் வைதிகமா (வேதத்தினுல் சித்தமாகிறதா) அல்லது அவைதிகமா (வேதத்தினுல் சித்தமாகாததா, மற்றும் வேதத்திற்கு விருத்தமானதா?) என்கிற ஐந்தாவது இஷ்யூவின் விசாரணை நடந்து, இன்றையதினம் "அத்வைத மதமும் பௌத்த மதமும் ஒன்றே" என்று கோர்ட்டார் தீர்மானிக்கிருர்கள்.

## காரணங்கள்.

| அத்வைத மத தத்வங்கள் | ஶூன்யவாதி பௌத்த மத தத்வங்கள். |
|---|---|
| (1) ப்ரஹ்மம் நிர்விஶேஷம். (ஸகல தர்மரஹிதம்) ஸத்யம், ஞான ரூபம், ஆனந்த ரூபம், அஞ்ஞேயம், அவாச்யம். | (1) ஶூன்யம் நிர்விசேஷம் (ஸகலதர்மரஹிதம்) ஸத்யம், ஞானரூபம், ஆனந்த ரூபம், அஞ்ஞேயம், அவாச்யம். |
| (2) வேதம், தேவதைகள், யஞ்ஞம், கங்காதி தீர்த்தங்கள், ப்ராஹ்மண்யாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், பரலோகம் முதலான ஜகத்து ஶஶ விஷாணத்தை (முயற்கொம்பை) ப்போலவும், மருமரீசிகை | (2) வேதம், தேவதைகள், யஞ்ஞம், கங்காதி தீர்த்தங்கள், ப்ராஹ்மண்யாதிவர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், பரலோகம் முதலிய ஜகத்து ஶஶ விஷாணத்தைப் (முயற்கொம்பை) போலவும், மருமரீ |

(கானலை) போலவும், ஸ்வப்னத்தைப்போலவும்மித்யை. (அஸத்யமானது) ப்ரஹ்மமொன்றே பாரமார்த்திக ஸத்யமானது.

(3) ஜீவன் 'அஹம் ப்ரஹ்ம, அஹம் ப்ரஹ்ம' என்று உபாஸனை செய்து, ப்ரஹ்மாத்மைக்ய ஸாக்ஷாத்காரத்தை யடைந்து, ப்ரஹ்ம பாவத்தை யடைவான்.

சிகைப் (கானலை) போலவும், ஸ்வப்னத்தைப் போலவும் மித்யை (அஸத்யமானது) ஶூன்யமொன்றே பாரமார்த்திக ஸத்யமானது.

(3) ஜீவன் 'அஹம் ஶூன்ய மஹம் ஶூன்ய' மென்று உபாஸனை செய்து ஶூன்யைக்ய ஸாக்ஷாத்காரத்தை யடைந்து, ஶூன்யபாவத்தை யடைவான்.

இவ்விதமாக இரண்டுமத தத்வங்களும் ஒன்றாக இருப்பதினால் **'அத்வைதமதம் ஶூன்யவாதிகளான பௌத்தரின்மதமே'** என்று கோர்ட்டார் நிஸ்சயிக்கிறார்கள். அதின் விவரம்:—

தாமஸ ஸ்வபாவமுள்ள ஜனங்கள் வேதத்தில் நம்பிக்கை யுள்ளவர்களாய், வேதங்களில் கூறப்பட்ட தர்மங்களைச் செய்துக் கொண்டுவரவே, அதினால் அவர்கள் பலத்தையடைந்து, தேவதைகளை பாதித்துக் கொண்டிருக்க—அத்தேவர்களால் ப்ரார்த்திக்கப்பட்ட பகவான் தாமஸ ஸ்வபாவமுள்ள அந்த அஸுர ஜனங்களை தர்ம மார்க்கத்திலிருந்து விலக்கி பலஹீனர்களாகச் செய்ய வேணுமென்கிற எண்ணத்தினால், புத்தரூபத்தை தரித்து, மோஹகமான பௌத்த ஶாஸ்த்ரங்களை இயற்றினார். காலாந்தரத்தில் மறுபடியும் அஸுரர்கள் வேதத்தில் ஶ்ரத்தை யுடையவர்களாய் வேதோக்தமான தர்மங்களைச்செய்ய ஆரம்பிக்கவே, பகவானின் உத்திரவின்படிக்கு ருத்ரபகவான் ப்ராஹ்மணசரீரத்தையடைந்து வேத வாக்யங்களுக்கெல்லாம் அபார்த்தங்களைக் கல்பித்து, அந்த பௌத்தமதத்திற்கே மாயாவாத ஶாஸ்த்ரமென்று (அத்வைத மதமென்று) பெயரிட்டு உலகத்தில் ப்ரசாரப்படுத்தினார். அந்த ஶாஸ்த்ரங்களில் ஜீவபரமாத்மர்களுக்கு ஐக்கியமென்றும், பரமாத்மா நிர்குணன், நிர்விசேஷன் (ஸகல தர்மரஹிதன்) என்றும் சொல்லப்பட்டிருக்கிறதென்று (1) விஷ்ணு புராணம்,

(1) प्रसीद नाथ दैत्येभ्यः त्राहि नः शरणार्थिनः । त्रैलोक्य यज्ञभागांश्च दैत्यैर्ह्रादपुरोगमैः ॥ हृता नो ब्रह्मणोप्याज्ञामुल्लंघ्य परमेश्वर । सवर्ण-

(2) பத்ம புராணம், (3) ப்ருஹத்ப்ரஹ்மஸம்ஹிதா முதலிய புராணங்களில் ஸ்ரீ வேதவ்யாஸர், பராஶரர் முதலியவர்கள் சொல்லியிருப்பதினால், அத்வைதமதம் பௌத்தமதமே என்று சித்தமாகிறது.

மற்றும் சங்கராசார்யரைக் காட்டிலும் ப்ராசீனரான அவரிட பரமகுருவாகிய கௌடபாதாசார்யரிட காலத்திலிருந்த பண்டிதர்களும் 'அத்வைத மதம் பௌத்தமதமே' என்று சொல்லியிருக்

---

धर्माभिरता वेदमार्गानुसारिणः ॥ न शक्यास्तेऽरयो हन्तुमस्माभिस्तपसा वृताः । तमुपायमशेषात्मन् अस्माकं दातुमर्हसि ॥ येन तानसुरान्हन्तुं भवेम भगवन् क्षमाः । इत्युक्तो भगवांस्तेभ्यो मायामोहं शरीरतः ॥ समुत्पाद्य ददौ विष्णुः प्राह चेदं सुरोत्तमान् । मायामोहोऽयमखिलान् दैत्यांस्तान् मोहयिष्यति । ततो वध्या भविष्यंति वेदमार्ग बहिष्कृताः । इत्युक्ता प्रणिपत्यैनं ययुर्देवा यथागतम् (विष्णुपुराणे)

(2) पार्वत्युवाच—तामसानि च शास्त्राणि समाचक्ष्व ममानघ। संप्रोक्तानि च यैर्विप्रैर्भगवद्भक्तिवर्जितैः ॥ तेषां नामानि क्रमशः समाचक्ष्व सुरेश्वर ॥ रुद्र उवाच—शृणु देवि प्रवक्ष्यामि तामसानि यथाक्रमम्। येषां स्मरणमात्रेण पातित्यं ज्ञानिनामपि ॥ प्रथमं हि मया प्रोक्तं शैवं पाशुपतादिकम् । मच्छक्त्यावेशितैर्विप्रैः प्रोक्तानि च ततः शृणु ॥ कणादेन तु संप्रोक्तं शास्त्रं वैशेषिकं महत् । गौतमेन तथा न्यायं सांख्यं तु कपिलेन वै॥ धिषणेन तथा प्रोक्तं चार्वाकमतिगर्हितम् । दैत्यानां नाशनार्थाय विष्णुना बुद्धरूपिणा ॥ बौद्धशास्त्रमसत्प्रोक्तं नग्ननीलपटादिकम् । मायावादमसच्छास्त्रं प्रच्छन्नं बौद्धमुच्यते । मयैव कथितं देवि कलौ ब्राह्मणरूपिणा ॥ अपार्थं श्रुतिवाक्यानां दर्शयन् लोकगर्हितम्। ...... ............परेशजीवयोरैक्यं मया तु प्रतिपाद्यते । ब्रह्मणोऽस्य स्वयं रूपं निर्गुणं वक्ष्यते मया ॥ सर्वस्य जगतोऽप्यत्र मोहनार्थं कलौयुगे। वेदार्थवन्महाशास्त्रं मायावादमवैदिकम् ॥ (पाद्मे)

(3) राजन् कार्यस्य मिथ्यात्वं नैर्गुण्यं परमात्मनः । आभासवादो जीवस्य पाषंडैरुपकल्पितः॥ नैतद्विश्वसनीयं ते मयोक्तमपि मायया। आज्ञया वासुदेवस्य मोहनाय सुरद्विषाम् ॥ प्रवर्तितमसच्छास्त्रमयथार्थस्य शासनात् । ......... ......मायावादमिदं शास्त्रं मायामोहप्रवर्तितम् ॥ (बृहद्ब्रह्मसंहितायां)

கிறார்களென்று (4) கௌடபாதாசார்யரின் க்ரந்தத்திலும், அதற்கு வ்யாக்யானமான (5) சங்கராசார்யரிட பாஷ்யத்திலும், அதற்கு வ்யாக்யானமான (6) ஆனந்தகிரீய க்ரந்தத்திலும்; மற்றும் கௌடபாதகாரிகைக்கு வ்யாக்யானரூபமான (7) மிதாக்ஷரா (8) கௌடபாதீயவிவேகம் முதலிய க்ரந்தங்களிலும் தெரிய வருகிறது. தவிர சங்காராசார்யரின் ஸமகாலீனர்களான (9) பாஸ்கராசார்யர், (10) விஞ்ஞானபிக்ஷு (11) பார்த்தஸாரதி மிஸ்ரர் முதலிய அநேக பண்டிதர்கள்—'அத்வைதமதம் பௌத்த மதமே' என்று சொல்லியிருப்பதிலும், விசாரிக்குங்கால் மேற்

(4) ज्ञानं नैतद्बुद्धेन भाषितं ॥ (गौडपादीयं)

(5) ज्ञानज्ञेयज्ञातृभेदरहितं परमार्थतत्वमद्वयमेतन्न बुद्धेन भाषितं। यद्यपि बाह्यार्थनिराकरणं ज्ञानमात्रकल्पना चाद्वय वस्तु सामीप्ययुक्तं इदं तु परमार्थतत्वमद्वैतं वेदान्तेष्वेव विज्ञेयमित्यर्थः ॥ (शां. भा.)

(6) ज्ञानमात्रं पारमार्थिकं तत्रैव ज्ञातृज्ञेयादि कल्पितमिति सौगत-मतमेव भवतापि संगृहीतमित्याशंक्याह—ज्ञानमिति ॥ (आनंदगिरीयम्)

(7) மேல்கண்ட 4, 5, 6, வது இலக்கமுள்ள வாக்கியங்களே எழுதப்பட்டிருக்கிறது. (மிதாக்ஷரா)

(8) ननु ज्ञानमात्रमेव तत्वं ज्ञातृज्ञेयादि सर्वं तत्र कल्पितं बौद्धमताचारः स्यादित्यत आह—नैतदिति । यद्यपि बाह्यार्थनिराकरणं ज्ञानमात्रस्यास्तित्वं च स्वीकृतं तथापि नैतदद्वैतदर्शनं बुद्धेन सुगतेन भाषितं भेदांगीकारादित्यर्थः । परमार्थाद्वैतदर्शनं वेदांतैक गम्यमिति नास्य साधारण मित्यर्थः ॥ (गौडपादीयविवेकम्)

(9) ये तु बौद्धमतावलंबिनो मायावादिनस्तेऽप्यनेन न्यायेन सूत्रकारेणैव निरस्ता वेदितव्याः । महायानिक बौद्धगाधितं मायावादं व्यावर्णयंतो लोकान् व्यामोहयंति ॥

(10) ये तु रज्जुसर्पादिवत् प्रपञ्चस्यात्यंत तुच्छत्वमिच्छन्ति ते तु बौद्धप्रभेदा एव । मायावादमसच्छास्त्रं प्रच्छन्नं बौद्धमेव च । इत्यादि पद्मपुराणवाक्यात् । असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् इत्यादि गीतावाक्याच्च ॥

(11) तद्वरं अस्मान्मायावादात् महायानिकवादः ॥

கூறப்பட்டவாறு இரண்டு மத தத்வங்களும் ஒன்றேயாயிருப்பதினாலும் '**அத்வைத மதம்** பௌத்த மதமே' என்று கோர்ட்டாரால் நிர்ணயிக்கப்படுகிறது.

"ப்ரதிவாதிகள் த்வேஷத்தினால் சொல்லியதை நிஜமென்று ஒத்துக்கொள்ளுவதாயின்—எல்லா மதத்திற்கும் ப்ரதிவாதிகளுண்டு. அவர்கள் மற்றொரு மதத்தை தூஷித்திருக்கிறார்கள். அந்த தூஷணங்களையும் ஒத்துக்கொள்ள வேண்டியதாகும். அப்படி ஒத்துக்கொள்ளுவது யுக்தமல்ல. ஆகையால் அத்வைதமதத்திற்கு (மாயாவாத மதத்திற்கு) ப்ரதிவாதிகளான பாஸ்கராசார்யர் முதலியவர்கள் த்வேஷத்தினால் அத்வைதமதம் பௌத்தமதமென்று சொல்லியிருப்பதை ஒத்துக்கொள்ளுவது யுக்தமல்ல" என்று ப்ரதிவாதிகள் (அத்வைதிகள்) சொல்லியதை கோர்ட் நிராகரிக்கிறது. ஏனெனின்:—

(12) ஸாக்ஷாத் நாராயணாவதார ரென்று அத்வைதிகளாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் பாதராயணாசார்யர் (வேதவ்யாஸர்) முதலிய மஹான்கள் த்வேஷமூலகமாக பொய் சொல்லுகிறார்களென்பது யுக்தமாகமாட்டாது. ஸாக்ஷ்யம் சொல்லுபவன் பெரிய மனிதனேயாகட்டும், அல்ப மனிதனேயாகட்டும், அவன் சொல்லியதற்கு எதுவரைக்கும் பாதகமுண்டாக மாட்டாதோ, அதுவரைக்கும் அவன் சொல்லியது நிஜமென்றே அங்கீகரிக்க வேண்டியதென்று ரூல் (நியமம்) உண்டு. ஸ்வத: ப்ராமாண்யம், பரத: அப்ராமாண்யம் என்று சொல்லும் ஶாஸ்த்ரகாரராயினும்—"எவ்வாக்யத்திற்கு எந்த அர்த்தம் எப்படி சொல்லப்படுகிறதோ, அந்த அர்த்தத்திற்கு பாதகம் வராவிடின் அதை அப்படியே ஒத்துக் கொள்ளுவதே ஸ்வத: ப்ராமாண்யமென்பது; அந்த அர்த்தத்திற்கு பாதகம் வந்தபக்ஷத்தில் அவ்வாக்யத்தினால் சொல்லப்பட்ட அர்த்தத்தை ஒத்துக் கொள்ளாமலிருப்பதே பரத: அப்ராமாண்யம்" என்று ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். ப்ரக்

---

**(12) द्वापरे द्वापरे विष्णुः व्यासरूपी महामुने । वेदमेकं सुबधा कुरुते जगतो हितम् ॥ (पराशरः)**

ருதம்—பாஸ்கராசார்யர் முதலிய பண்டிதர்கள் 'அத்வைதமதம் பௌத்தமதமே' என்று சொல்லியிருக்கிறார்கள். அதற்கு எவ்விதமான பாதகமும் காணப்படவில்லை. தவிர இரண்டு மதங்களின் தத்வங்களையும் விசாரிக்குங்கால் இரண்டும் ஒன்றேயென்றும் சித்திக்கிறது. ஆகையால் "பாஸ்கராசார்யர் முதலியவர்கள் சொல்லியது த்வேஷமூலகமாகையால் ஒத்துக்கொள்ளக் கூடாது" என்று ப்ரதிவாதிகள் சொல்லியதை கோர்ட்டார் நிராகரிக்கின்றார்கள்.

அத்வைதிகளான ப்ரஹ்மவித்யாபரணகாரர்—(13) 'ஶூன்யவாதிபக்ஷஸ்து' என்கிற பாஷ்யத்திற்கு வ்யாக்யானம் செய்யும் காலத்தில் "ஶூன்யம் பாவரூபமென்று பௌத்தர்கள் ஒத்துக் கொள்ளுவார்களேயாயின், அந்த ஶூன்யம் எங்களிட (அத்வைதிகளிட) ப்ரஹ்மரூபமேயாய், எங்களிட ப்ரஹ்மவாதமும் ஶூன்யவாதமும் ஒன்றேயாகிறது" என்று கண்டத: சொல்லியிருக்கிறார்.

ஶூன்யம் ப்ரபஞ்சாபாவ ரூபமேயாயினும்—அத்வைதிகள் ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவ ரூபமென்று (14) அத்வைதஸித்தி, (15) கண்டன கண்டகாத்யம் முதலிய அநேக நூல்களில் ஒத்துக் கொண்டிருக்கிறபடியால், ப்ரபஞ்சாபாவ ரூபமான ப்ரஹ்மமும், ப்ரபஞ்சாபாவ ரூபமான ஶூன்யமும் ஒன்றேயாய் அவ்விரண்டு மதங்களும் ஒன்றேயாகின்றன.

---

(13) शून्यवादिपक्षस्तु—सर्वप्रमाणविप्रतिषिद्ध इति तन्निराकरणाय नादरः क्रियते (ब्र. सू. शां. भा. 2—2—39) शून्यपदेन सर्वप्रपञ्चातीतं भावरूपं किञ्चित्तत्वं विवक्षितं उत अभावरूपं? नाद्यः तथा सति वाचो युक्त्यंतरेण ब्रह्मवाद एव आश्रितः । यदि द्वितीयः पक्षः—तदा सर्वप्रमाण विरोधः सर्वप्रमाणैः प्रपञ्चे उपलभ्यमाने तदभाव एव तत्वमिति निरूपयितुमशक्यमिति दूषणस्य स्फुटतया न तन्निराकरणाय सूत्रकृता सूत्राण्यारचितानि इति (ब्रह्मविद्याभरणे 2—2—39)

(14) प्रपञ्चनिषेधाधिकरणीभूत ब्रह्माभिन्नत्वान्निषेधस्य तात्विकत्वेपि नाद्वैतहानिकरत्वम् ॥

(15) 'भावेऽभावानतिरेक स्वीकारादेवाद्वैताव्याघातः' 'अस्माभिरपि ब्रह्मातिरिक्ताभावानंगीकारान्नाद्वैत व्याघातः'

'வந்த சங்கராசார்யர் பௌத்தமதத்தைக் கண்டித்திருக்கிறாரோ அந்த சங்கராசார்யரே அத்வைதமதம் பௌத்தமதமென்று சொல்லி யிருக்கிறாரென்பது அயுக்தம்" என்று அத்வைதிகள் சொல்லுவது சரியல்ல. ஏனெனின்:—

சங்கராசார்யர் தம்மிட ஸர்வஸித்தாந்த ஸாரஸங்க்ரஹமென்கிற க்ரந்தத்தில்—(16) "பௌத்தாதி நாஸ்திகத்வஸ்த" இது முதலிய ஶ்லோகங்களால் பௌத்தரே முதலிய நாஸ்திகர்களால் நாசம் செய்யப்பட்ட வேதமார்க்கத்தை குமாரிலபட்டர் பூமண்டலத்தில் ஸ்தாபித்தனர். வேதபாஹ்யர்களை (பௌத்தர்களை) நிராகரித்து குமாரிலபட்டரால் ஸ்தாபிக்கப்பட்ட வேதமார்க்கத்தில் ஜனங்கள் நடந்தனர் என்று ஸ்பஷ்டமாய் சொல்லியிருக்கிறார். மற்றும்—ஆனந்தகிரி என்பவரால் இயற்றப்பட்ட சங்கர விஜயத்தில் (குமாரில) பட்டாசார்யர் என்கிற ஓர் ப்ராஹ்மண ஶ்ரேஷ்டர் உத்தர தேசத்திலிருந்து வந்து, துஷ்டமதத்தை ஆஶ்ரயித்திருக்கும் எண்ணில்லாத பௌத்தர்களையும் ஜைனர்களையும் ஶாஸ்த்ரார்த்த விசாரத்தினால் ஜயித்து, இராஜரால் அந்த பௌத்தர்களின் தலைகளை கோடாலியினால் நருக்குவித்தும், உரலிலிட்டு பொடி செய்வித்தும் நிர்ப்பயராய் இருக்கிறாரென்கிற அற்புதமான கார்யங்களை சங்கராசார்யர் கேட்டு, அக்குமாரிலபட்டரிருக்கும், ஜயகோஷத்துடன் கூடிய

---

(16) बौद्धादि नास्तिकध्वस्त वेदमार्गं पुरा किल । भट्टाचार्यः कुमारांशः स्थापयामास भूतले ॥ वेदबाह्यान्निराकृत्य भट्टाचार्यैर्गते पथि । (शां. सर्वसि.)

भट्टाचार्याख्यो द्विजवरः कश्चिदुदग्देशादागत्य दुष्टमतावलंबिनो बौद्धान् जैनानसंख्यान् राजमुखादनेक विद्याप्रसंग भेदैर्निर्जित्य एषां शीर्षाणि परशुभिश्छित्वा बहुषु उलूखलेषु निक्षिप्य कटभ्रमणैश्चूर्णीकृत्य चैवं दुष्टमतध्वंसमाचरन् निर्भयो वर्तते श्रुत्वैतदद्भुतं कर्म गुरुः (शंकरः) शिष्यसमन्वितः । प्राप्तो रुद्राख्यनगरं जयशब्दविजृंभितम् (तदनु) जानुमात्रदघ्नोपि भट्टाचार्यः तं (शंकराचार्यप्रति) जाग्रत्कालानागतो नूतनो बौद्धतरः इति प्राहेत्यादि (आनंदगिरि शंकरविजये.)

ருத்தா என்கிற பட்டணத்திற்கு சிடர்களுடன்கூட போகவே—வந்த சங்கராசார்யரைக் குறித்து குமாரிலபட்டர் "புதிய பௌத்ஶ்ரேஷ்டனே! நான் ஜாக்ரத்காலத்தி லிருக்கையில் (சரியான ஸ்திதி யிலிருக்கையில்) நீ வாராமற் போனாய், இப்போது நான் முழங்கால் வரைக்கும் சுடப்பட்டிருக்கிறேன்" என்று சொல்லியிருக்கிறாரென்று தெரியவருகிறது. மற்றும் வித்யாரண்யரால் செய்யப்பட்ட (17) சங்கர விஜயத்தினாலும் மேற் கூறியவாறே தெரியவருகிறது. ஆகையால் "சங்கராசார்யர் பௌத்தமதத்தை கண்டித்திருக்கிறாரென்பது வெறும் பொய்" என்று கோர்ட்டாரால் நிர்ணயிக்கப்படுகிறது.

பிரதிவாதிகள் முதலாவது தத்வத்தின் விஷயத்தில்—"பௌத்தர்கள் சொல்லும் ஶூன்யம் நிர்விசேஷமல்ல, ஸத்யமல்ல, ஞானரூபமல்ல, ஆநந்தரூபமல்ல, அஜ்ஞேயமல்ல, அவாச்யமல்ல. ஆகையால் நிர்விசேஷ ஸத்யஞானாநந்தாதி ரூபமான ப்ரஹ்மம் அந்த ஶூன்யத்தைவிட வேறானது" என்று சொல்லியதை அயுக்தமென்று கோர்ட்டார் நிராகரிக்கிறார்கள். ஏனெனின்:-

"நிர்விசேஷத்வாத் ஶூன்யவத் ஶூன்ய:" என்கிற ஸஹஸ்ரநாமத்தின் சங்கரபாஷ்ய வாக்யத்தினாலும், "நிர்விசேஷம் ஸ்வயம் பாதம்" என்கிற பௌத்தர்களின் வாக்யத்தினாலும் அத்வைதிகளின் ப்ரஹ்மத்தைப் போலவே ஶூன்யமும் நிர்விசேஷமென்று சித்திக்கிறது.

"த்வே ஸத்யே ஸமுபாஶ்ரித்ய புத்தானாம் தர்மதேஶனா, லோகே ஸாம்வ்ருத ஸத்யம் சஸ்த்யம்ச பரமார்த்தத:" இதே முத

---

(17) उपन्यसत्सु साक्षेपं खंडयत्सु परस्परम् । तेषूदतिष्ठन्निर्घोषो भिन्दान्निव रसातलं ॥ अधः पेतुर्बुधेंद्रेण क्षताः पक्षेपु तत्क्षणं । व्यूढकर्कश तर्केण तथागत धराधराः ॥ निरस्ताखिल सन्देहो विन्यस्तेतरदर्शनात् । व्यधादाज्ञां ततो राजा वधाय श्रुतिविद्विषाम् ॥ आशेतोरातुषाराद्रेबौद्धानावृद्धबालकम् । न हन्ति यस्स हंतव्यो भृत्यानित्यन्वशान्नृपः । कुमारिलमृगेंद्रेण हतेषु जिनहास्तिषु । निष्प्रत्यूहमवर्धन्त श्रुतिशाखास्समन्ततः ॥ (विद्यारण्य शंकरविजये)

லிய பௌத்தர்களின் வாக்யத்திலும், "ஶூன்யவாதிநாம் ஶூன்யதாயா அபி ஸத்யத்வாத்" என்கிற பாமதி முதலிய அத்வைத கிரந்தங்களின் வாக்யங்களினாலும் ஶூன்யமும் ப்ரஹ்மத்தைப் போல் ஸத்யமானதென்று சித்தமாகிறது.

"ஶூன்யவாதிபிரபி ஸத்வரஹித ஞானானந்தாத்மகத்வஸ்ய ப்ரஹ்மணோன்யத்ராங்கீகாராத்" என்கிற அத்வைதசித்தி வாக்யத்தினாலும் "ஶூன்யவாதஸ்ய விஞ்ஞானவாத விஶேஷரூபத்வாத், ததா சாநந்தோபி ஞானாகாரத்வாத், ஞானபின்ன இதிஞானாத் மகாநந்தவத்வம் தன்மதே (ஶூன்யவாதிமதே) ப்ரஹ்மபின்னே ஹிதி" என்கிற கௌட ப்ரஹ்மாநந்தீய வாக்யத்தினாலும்; "கேவலாம் ஸம்விதம் ஸ்வஸ்தாம் மன்யந்தே மத்யமா: புன:" "அத்வய ஞானைகரூபாம் ஶூன்யதாம் விபாவ்ய ஓம் ஶூன்யஞானவஜ்ர ஸ்வபாவாத்மகோஹம்" "கேவலாம் அத்வய விஞ்ஞப்திலக்ஷணாம்" இவைகளே முதலிய பௌத்தர்களின் வாக்யங்களினாலும் பௌத்தர்களின் ஶூன்யம் அத்வைதிகளின் ப்ரஹ்மத்தைப்போலவே, ஞானரூபம் ஆனந்தரூபம் என்று சித்தமாகிறது.

"அத்வைதசித்திகாரர்—ஶூன்யம் ஸத்வரஹித ஞானானந்த ரூபமென்று சொல்லியிருப்பதால் ஶூன்யத்திற்கு ஸத்யத்வத்தை பௌத்தர்கள் ஒத்துக்கொள்ளுகிறார்களென்று எப்படி சித்திக்கிறது" என்கிற அத்வைதிகளின் ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனின்:—'ஸத்யம் ச பரமார்த்தத:' இது முதலான பௌத்தர்களின் வாக்யங்களினாலும்; "ஶூன்யவாதிநாமபி ஶூன்யதாயா: ஸத்யத்வாத்" இதே முதலிய அத்வைதகளின் வாக்யங்களினாலும் ஶூன்யம் ஸத்ய ரூபமானதென்று சித்தமாய்க் கொண்டிருப்பதால் அவ்விஷயத்தில் அத்வைதசித்திகாரருடைய வாக்யம் அங்கீகரிக்கத் தக்கதல்ல.

"நிர்விசேஷம் ஸ்வயம் பாதம் நிர்லேபமஜராமரம்| ஶூன்யம் தத்வமவிஞ்ஞேயம் மனோவாசாமகோசரம்" என்கிற பௌத்தர்களின் வாக்யத்தினாலும் ஶூன்யம் அத்வைதிகளின் ப்ரஹ்மத்தைப்போல் அஞ்ஞேயம், அவாச்யம் என்று சித்திக்கிறது. ஆகையால் அத்வைதிகளின் ப்ரஹ்மத்தைப்போலவே பௌத்தர்களின்

ஶூன்யமும் நிர்விசேஷம், ஸத்யம், ஞானரூபம், ஆனந்தரூபம், அஞ்ஞேயம், அவாச்யமுமாகையினால் ப்ரஹ்மம்,ஶூன்யம் என்று பெயர் மாத்திரம் வேரேயொழிய, ப்ரஹ்மம் ஶூன்யத்தை விட வேரல்ல.

அத்வைதிகள் தங்களிட ப்ரஹ்மத்தை நிர்விசேஷமென்று (ஸகலதர்மரஹிதமென்று) ஒத்துக்கொள்ளுகிறார்கள். மற்றும் 'நாமவா கர்மவா பேதோவா ந ப்ரஹ்மண்யஸ்தி' என்று எந்த பேதமும் தங்களிட ப்ரஹ்மத்தில் இல்லை என்று கண்டத: சொல்லி யிருப்பதினால் அத்வைதிகளின் ப்ரஹ்மத்தில் ஶூன்யத்தின் பேதமிருப்பதற்கு ஸம்பவமே கிடையாது. ஆகையால் "அத்வைதிகளின் ப்ரஹ்மமும் பௌத்தரின் ஶூன்யமும் ஒன்றே" என்று கோர்ட்டார் நிர்ணயிக்கிறார்கள்.

---

## வேதம் முதலிய ஜகத்தின் விஷயத்தில் தீர்மானம்.

"அத்வைதமதத்தில் வேதத்தை ஒத்துக்கொண்டு, அதற்கு ப்ராமாண்யத்தையும் ஒத்துக்கொண்டு, அதில் சொல்லப்பட்ட ப்ராஹ்மணாதி வர்ணங்களையும், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்களையும் ஒத்துக்கொண்டு, அந்தந்த வர்ணாஶ்ரமங்களுக்கு வேதத்தினால் விஹிதமான (வேதத்தில் சொல்லப்பட்ட) ஸ்நானம், ஸந்த்யாவந்தனம், பகவத்பூஜை, யஞ்ஞம், தானம், வேதாத்யயனம் இவைகளைச் செய்துக்கொண்டு, சுத்தாந்த: கரணமுள்ளவராய், ஶ்ரவண மனனத்யானங்களைச் செய்து, வேதாந்த ஶாஸ்த்ரங்களினால் ப்ரஹ்மாபரோக்ஷ ஞானத்தை ஸம்பாதித்துக் கொண்டு ப்ரஹ்மபாவ ரூபமோக்ஷத்தை அடையவேண்டியதென்று சொல்லி யிருப்பதினால் அம்மதத்தாராகிய அத்வைதிகள் ஆஸ்திகர்களாவர். பௌத்த மதத்தில்—வேதத்தை ஒத்துக்கொள்ளவில்லை. வேதத்திற்கு ப்ராமாண்யமும் ஒத்துக்கொள்ளவில்லை. வேதோக்தமான ப்ராஹ்மணாதி வர்ணங்களையும் ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்களையும் ஒத்துக்கொள்ளவில்லை. அந்தந்த வர்ணாஶ்ரமங்களுக்கு சொல்லப்பட்ட யஞ்ஞாதிகளையும் ஒத்துக்கொள்ளவில்லை. ஆகையால் அம்மதத்தாராகிய பௌத்தர்கள் நாஸ்திகர்களாவர். இத்தகைய நாஸ்திகர்களான பௌத்தர்களின் மதமும், ஆஸ்திக சிரோமணிகளான

அத்வைதிகளின் மதமும் ஒன்றே என்று வாதி சொல்லுவது யுக்தமல்ல" என்கிற அத்வைதிகளின் வார்த்தைகள் எல்லா-விஷயத்திலும் இரண்டு மதங்களும் ஒன்றேயாயிருப்பதினால் சரியானதல்ல என்று கோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். எப்படியெனில்:—

பரலோகமுண்டு, அதற்கு ஸாதனங்களுண்டு, பலத்தைக் கொடுக்கும் ஈஶ்வரனுண்டு என்று தெரிந்துக்கொண்டு அப்பரலோகத்தை அடைவதற்காக புண்ய கர்மங்களைச் செய்கிறவர்கள் ஆஸ்திகர்களாவர். பரலோகம் முதலியவைகளில்லை என்று தெரிந்துக்கொண்டு, புண்யகர்மங்களைச் செய்யாமலிருப்பவர்கள் நாஸ்திகர்களாவர் (18) 'அஸத்யமான வேதாந்த வாக்யத்தினால் ஸத்யமான ப்ரஹ்மம் எப்படி சித்திக்கும்' என்று சங்கராசார்யர் சொல்லியிருப்பதினாலும், "ஜ்யோதிஷ்டோமேன ஸ்வர்க்ககாமோ யஜேத" என்கிற வாக்யத்தினால் ஸ்வர்க்கத்திற்கு ஜ்யோதிஷ்டோமயாகம் காரணமென்று தெரிந்துக்கொண்டு, யாகத்தைச் செய்து அதினால் அடையும் ஸ்வர்க்காதி பலங்கள்—ஸ்வப்னத்தில் கல்பிக்கப்பட்ட 'ஜ்யோதிஷ்டோமேன' என்கிற ஶ்ருதியினால் ஸ்வர்க்கத்திற்கு ஜ்யோதிஷ்டோமயாகம் காரணமென்று தெரிந்துகொண்டு, ஸ்வப்னத்தில் செய்த யஞ்ஞத்தினால் அடையும் ஸ்வர்க்க பலத்தைப்போல் பொய்யானது. ஆகாயாதிகளின் ஸ்ருஷ்டி முதலியவைகள் ஶஶவிஷாணத்தைப்போல் (முயர்கொம்பைப்போல்) பொய்யானது. என்று (19) ஸித்தாந்தலேஶ ஸங்க்ரஹத்திலும், (20) அதின் வ்யாக்யானத்திலும் சொல்லப்பட்டிருப்பதினா

---

(18) कथं त्वसत्येन वाक्येन सत्यस्य ब्रह्मत्वस्य सिद्धिः ॥ (ब्र. सू. शां. भा. 2—1—14)

(19) ज्योतिष्टोमादि श्रुतिबोधितानुष्ठानात् फलसिद्धिः स्वाप्नश्रुति-बोधितानुष्ठानप्रयुक्त फलसंवादतुल्या। (सिद्धांतलेशसंग्रहे)

(20) स्वप्ने कश्चित् कदाचित् ज्योतिष्टोमादिश्रुतिं कल्पयित्वा ततः साधनविशेषमुपलभ्य तदनुष्ठानात् फलं लभते तत्तुल्यं जागरणेऽपि स्वर्गादि फललंभनं वियदादिसृष्टि तत्क्रमादेः शशशृंगायमाणत्वं ॥ (सिद्धान्त-लेशसंग्रहव्याख्या.)

லும் "ஜாக்ரத்காலத்திலிருக்கும் எல்லா வஸ்துக்களும் கல்பிதமா யின்—ஸ்வப்னத்தில் தோன்றும் பதார்த்தங்களுக்கும், ஜாக்ரத் காலத்தில் காணப்படும் ஜகத்துக்கும் என்ன வைலக்ஷண்யம்? இரண்டும் கல்பிதமேயல்லவா" என்று (21) ஸம்க்ஷேபசாரீரக வாக்யத்தில் சொல்லியிருக்கிறதினாலும், "ஸ்வாப்ன பதார்த்தங்களும் மாயாகல்பிதமான பதார்த்தங்களும் கந்தர்வ நகரமும் எப்படி அஸத்யமானவைகளோ அப்படியே இவ்வெல்லா ஜகத்தும் அஸத்யமானது, உத்பத்தி இல்லை நாசமில்லை பத்தன் (ஸம்ஸாரியான ஜீவன்) இல்லை, மோக்ஷ ஸாதனத்தைச் செய்யும் மனிதனில்லை, மோக்ஷத்தைக் கோரும் மனிதனில்லை, முக்தனில்லை, எல்லா ப்ரபஞ்சமும்அஸத்யமானது" என்று (22) கௌடபாதாசார்யரின் காரிகையிலும் அதிற்கு வ்யாக்யானமான (23) சங்கராசார்யரின் பாஷ்யத்திலும் சொல்லியிருப்பதினாலும் எல்லா ஜகத்தும் ஸ்வப்னத்தைப் போலவும், கந்தர்வ நகரத்தைப் போலவும், அஸத்யமானதென்று அத்வைதிகள் ஒத்துக்கொள்ளுகிறார்களென்று தெரியவருகிறது.

(24) 'யதாமாயா' இது முதலிய பௌத்தர்களின் வாக்யங்களினால் ஜகத்து ஸ்வப்னத்தைப் போலவும், கந்தர்வ நகரத்தைப் போலவும் அஸத்யமானதென்று பௌத்தர்களும் ஒத்துக் கொள்ளுகிறார்களென்று தெரியவருகிறது.

---

(21) ननु कल्पितं यदि हि जागरितं वद कीदृशी खलु विलक्षणता। स्वपनादमुष्य भवतोभिमता परिकल्पितत्वमुभयोस्तु समम् ॥ (संक्षेपशारीरकम् )

(22) स्वप्नमाये यथा दृष्टे गंधर्वनगरं यथा । तथाविश्वमिदं दृष्टं वेदांतेषु विचक्षणैः ॥ न निरोधो न चोत्पत्तिः न बद्धो न च साधकः । न मुमुक्षुः न वै मुक्तः (गौडपादकारिका)

(23) गंधर्वनगरं दृश्यमानमेव सत् अकस्मादभावतांगतं दृष्टं यथा च स्वप्नमाये दृष्टे असद्रूपे तथा विश्वमिदं द्वैतं समस्तमसत्.........द्वैतस्यासत्वात् (गौ. शां. भा.)

(24) यथा माया यथा स्वप्नं गंधर्वनगरं यथा । तथोत्पादस्तथा स्थानं तथा भंग उदाहृतः ॥

அத்வைதிகள்— "ஸ்வப்னத்தைப்போலவும், மருமரீசிகை (கானலை) போலவும் பரலோகாதி ஜகத்தும், அதற்கு ஸாதனங்களும் அஸத்யமானவை, நம்மால் கந்தவ்யமான (அடைவதற்கு யோக்யமான) உலகமில்லை, நம்மால் செய்யப்பட வேண்டிய கர்மங்களில்லை, கேழ்க்கப்படவேண்டிய வஸ்துக்களில்லை விசாரிக்கப்பட வேண்டிய வஸ்துவில்லை" என்று மனதில் வைத்துக்கொண்டு, "கஜோபிமித்யா பலாயனமபி மித்யா" யானையும் பொய் ஓடுவதும் பொய்"என்று சொல்லுவதுபோல் ஸ்நான ஸந்த்யா யஞ்ஞ வேதாத்யயனம் முதலிய கர்மங்களைச் செய்பவரைப்போல் நடிப்பதைப் போலவே, பௌத்தர்களும்-ஸ்வர்க்காதி பரலோகங்களும் அவைகளுக்கு ஸாதனங்களும் மித்யை என்று தெரிந்துகொண்டிருந்தாலும் 'நஹி ஸ்வப்னஸுகாத்யர்த்தம் தர்மே கஶ்சித் ப்ரவர்த்ததே| நாஸ்திக்ய பரிஹாரார்த்தம்' என்று வார்த்திககாரர் சொல்லியுள்ளபடிக்கு ஆஸ்திக ஜனங்களின் வஞ்சனைக்காக 'ஸ்வர்க்க காமஶ்சைத்யம் வந்தேத'என்கிறவாக்யத்தில் சொல்லியுள்ளபடிக்கு ஸ்வர்க்கத்திற்காக கர்மங்களைச் செய்பவர்களைப் போல் நடிக்கிறார்கள். ஆகையால் ஜகத்தின் விஷயத்தில் இவ்விரண்டு மதங்களும் ஒன்றாகவே இருப்பதால்—ஒருவர் (அத்வைதிகள்) ஆஸ்திகர்களென்றும், மற்றொருவர் (பௌத்தர்கள்) நாஸ்திகர்களென்றும் சொல்லுவதற்கு ஸாத்யமில்லை. இப்படி இரண்டு மதங்களும் நாஸ்திக மதமேயாகையால் இருவரும் நாஸ்திகர்களே" என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள்.

"அத்வைதிகள் வேதம் ப்ரமாணமென்று ஒத்துக்கொண்டு, அவ்வேதத்தினால் சொல்லப்படும் பரலோகம் முதலிய ஜகத்து வ்யாவஹாரிக ஸத்யமானதென்று ஒத்துக்கொள்ளுகிறார்கள். பௌத்தர்கள் வேதத்தை ப்ரமாணமென்று ஒத்துக்கொள்ளுவதில்லை. வேதாதி ப்ரமாணங்களினால் சொல்லப்படும் பரலோகாதிகள் வ்யாவஹாரிக ஸத்யமானதென்று ஒத்துக்கொள்ளுவதில்லை. ஆகையால் பௌத்தர்கள் நாஸ்திகர்கள். அத்வைதிகள் ஆஸ்திகர்கள்" என்று ப்ரதிவர்திகள் சொல்லும் காரணமும் சரியானதல்ல என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள். எப்படியெனில்:—

அத்வைதிகள் எப்படி பரலோகாதிகள் வ்யாவஹாரிக ஸத்யமென்று ஒத்துக்கொள்ளுகிறார்களோ, அப்படியே பௌத்தர்களும் பரலோகாதிகள் வ்யாவஹாரிக ஸத்யமென்று ஒத்துக்கொள்ளுகிறார்களென்று 'த்வே ஸத்வே ஸமுபாஶ்ரித்ய' என்கிற இது முதலிய பௌத்தர்களின் வாக்யங்களினாலும்; 'நாஸ்திக்ய பரிஹாரார்த்தம் ஸம்வ்ருதி: கல்பநேதிச' இது முதலிய வார்த்திககாரரின் வாக்யத்தினாலும்; 'யத்யுச்யேத' முதலிய பாமதீகாரரின் வாக்யங்களினாலும் சித்தமாய்க் கொண்டிருப்பதினால் 'அத்வைதிகள் பரலோகாதிகளை வ்யாவஹாரிக ஸத்யமானதென்று சொல்லுகிறார்கள். பௌத்தர்கள் சொல்லுவதில்லை என்று மதங்களுக்கு வைஷம்யத்தைச் சொல்லுவது யுக்தமல்ல.

'ஸதிகுட்யே சித்ரம் கர்ம' சுவர் இருந்தால் சித்திரம் எழுதலாம் என்கிற நியாயத்தைப்போல் சுவரே இல்லாவிட்டால் சித்ரம் எழுதுவது எப்படிப் பொருந்தாதோ, அப்படியே—வேதமே ம்ருகத்ருஷ்ணத்தைப் (கானலைப்) போல் பொய்யென்று சொல்லிய பின் அத்தகைய வேதத்திற்கு ப்ராமாண்ய முண்டென்பது எப்படிப்பொருந்தும்? (பொருந்தாது) ஆகையால் "அத்வைதிகள் வேதம் ப்ரமாணமென்கிறீர்கள், பௌத்தர்கள் ப்ரமாண மென்கிறதில்லையாகையால் இவ்விஷயத்தில் இவ்விரண்டு மதங்களுக்கும் பேதமுண்டு" என்று ப்ரதிவாதிகள் சொல்லுவது யுக்தமல்ல.

ப்ரமாணங்கள் தங்கள் தங்கள் விஷயங்களை பாரமார்த்திக ஸத்யமான வைகளென்றே கிரகிக்கின்றன. வ்யாவஹாரிக ஸத்யமானவைகளென்று கிரகிக்கிறதில்லை என்று சங்கரபாஷ்ய பாமதீ வாக்யங்களில் சொல்லி யிருக்கிறபடியால்—"வேதாதி ப்ரமாணங்களினால் சொல்லப்பட்டிருக்கும் ஸ்வர்க்காதி பரலோகங்கள், வேதம், யஞ்ஞம், தீர்த்தம், தேவதைகள், கர்த்ருத்வம், போக்த்ருத்வம்இவைகளே முதலியஜகத்து வ்யாவஹாரிக ஸத்யமானது, என்று அத்வைதிகள் சொல்லுவது அவாளிட பேச்சுக்கே விருத்தமாக ஒத்துக்கொண்டார் போலாகிறது.

ப்ரமாண ஶப்தத்திலுள்ள ப்ர-மா-அன என்கிற மூன்று பாகங்களில்—ப்ர என்றால் பாரமார்த்திக ஸத்யமான வஸ்துவை

விஷயீகரிக்கும், மா என்றால் ஞானத்தை, அன என்றால் பிறப்பிக்கிறது (ப்ரமாணமென்றால்—பரமார்த்த ஸத்யமான வஸ்துவை விஷயீகரிக்கும் ஞானத்தை பிறப்பிப்பது = ப்ரமாணங்களினால் பிறந்த ஞானத்தினால் விஷயீகரிக்கப்பட்ட வஸ்து பரமார்த்த ஸத்யமானது) என்று ப்ரமாண ஶப்தத்திற்கு அர்த்தமிருப்பதினால்—வ்யாவஹாரிக ஸத்யமென்றால் ஶுக்திரஜதத்தைப்போல் பாத்யமானது (முக்காலத்திலு மில்லாதது) என்று அர்த்தமென்று அபேயதீக்ஷிதர் முதலியவர்களின் வாக்யங்களினால் சித்தமாய்க்கொண்டிருப்பதினால்-பரலோகாதிகள் வ்யாவஹாரிக ஸத்யமென்றால் பாத்யமானது(முக்காலத்திலுமில்லாதது) என்று சித்தமாய், அத்தகைய வ்யாவஹாரிகஸத்யமான பரலோகாதிகளைச்சொல்லும் வேதாதிகள் ப்ரமாணங்களல்ல, (பாரமார்த்திக ஸத்யமான பதார்த்தங்களை தெரிவிப்பவைகளல்ல) அப்ரமாணங்களே என்று சித்திக்கிறது. ஆகையால் "அத்வைதிகள் வேதத்தை ஒத்துக்கொண்டு அவைகள் ப்ரமாணமென்று ஒத்துக்கொள்ளுகிறார்கள்; பௌத்தர்கள் வேதத்தை ஒத்துக்கொள்ளுவதில்லை, அதிற்கு ப்ராமாண்யத்தையும் ஒத்துக்கொள்ளுவதில்லை" என்று சொல்லும் பேதம் அயுக்தமானதென்று கோர்ட்டார் தீர்மானிக்கிறார்கள்.

"அத்வைத மதத்தின்படிக்கு—ஜீவன் ப்ரஹ்மாபரோக்ஷ ஞானத்தை ஸம்பாதித்துக் கொண்டு ஆனந்தரூபமான ப்ரஹ்ம ரூபமாய் அந்த ப்ரஹ்மானந்தத்தை அனுபவிக்கிறான், பௌத்த மதத்தின்படிக்கு — ஶூன்யாபரோக்ஷத்தையடைந்து ஶூன்ய ரூபமாகிறான். ஆகையால் இரண்டு மததத்வங்களுக்கும் பேதமுண்டு" என்று அத்வைதிகள் சொல்லுவது யுக்தமல்ல. ஏனெனில்:—

எப்படி ப்ரஹ்மம் ஆனந்தரூபம், ஞானரூபமென்று அத்வைதிகள் சொல்லுகிறார்களோ, அப்படியே பௌத்தர்களும் தங்களிட ஶூன்யம், ஞானரூபம் ஆனந்தரூபமென்று சொல்லுகிறார்கள். அத்வைதிகள்—மோக்ஷாவஸ்தையில் ஜீவன் ஆனந்தரூபமான ப்ரஹ்மமாகிறானேயொழிய ஆனந்தத்தையனுபவிப்பதில்லை

என்று சொல்லுகிருர்கள். பௌத்தர்களும்—ஜீவன் மோக்ஷாவஸ்தையில் ஆநந்தரூபமான ஶூன்யமாகிருனென்று சொல்லுகிருர்கள். ஆகையால் மோக்ஷாவஸ்தையிலும் அத்வைத மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் பேதமில்லை.

இப்படி எல்லா விஷயத்திலும் அத்வைதமதமும் ஶூன்யமே தத்வமென்று சொல்லும் அவைதிகமான பௌத்த மதமும் ஒன்றேயாகிறது.

---

## விஞ்ஞானவாதி பௌத்தாத்வைத மதஸாம்ய நிர்ணயம்.

ஜகத்து— ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களினுல் காணப்பட்டுக்கொண்டிருக்க, முதலிலேயே எல்லாம் ஶூன்யமே என்று சொல்லின், சில மூடர்களான சீடர்கள் தம் மதத்தை ஒத்துக்கொள்ளமாட்டார்கள். ஆகையால் ஜகத்து ஸத்யம், க்ஷணிகமென்று சொல்லிக்கொண்டே கடைசியில் ஶூன்யத்திலேயே பர்யவஸானம் செய்கிருர்கள்.

மத்யமர்களான சீடர்களைக் குறித்து 'விஞ்ஞானமொன்றே தத்வம், அந்த விஞ்ஞானத்தில் எல்லாஜகத்தும் கல்பிதம்' என்று சொல்லிக்கொண்டே கடைசியில் ஶூன்யவாதத்திலேயே பர்யவஸானம் செய்கிருர்கள்.

உத்தம சீடர்களைக்குறித்து ஆரம்பத்திலேயே ஶூன்யமொன்றே தத்வம், அச்சூன்யத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதமானதென்று சொல்லுகிரார்களென்று பௌத்தர்களின் — 'தேஶனா லோகநாதானும்' இது முதலிய வாக்யங்களினுலும், 'விநேய பேதாத்வா' என்கிற சங்கரபாஷ்யம், மற்றும் "ஹீநமத்யமோத்க்ருஷ்டதிய:' இது முதலிய 2-2-18 பாமதீ வாக்யத்தினுலும் சித்திக்கிறதினுல் — பௌத்தர்களுக்கு ஶூன்யவாதத்திலேயே முக்ய தாத்பர்யமுண்டென்று தெரியவருகிறது. அத்வைதமதமும் ஶூன்யவாதி பௌத்தமதமும் ஒன்றேயான பிறகு, அத்வைத

மதம் விஞ்ஞானவாதிகளான பௌத்தர்களின் மதமேயாகிறது இது மாத்ரமேயல்லாமல்:—

| அத்வைத மததத்வங்கள். | விஞ்ஞானவாதி பௌத்த மததத்வங்கள். |
| --- | --- |
| (1) விஞ்ஞானம் (ப்ரஹ்மம்) தத்வம். | (1) விஞ்ஞானம் தத்வம். |
| (2) அவ்விஞ்ஞானத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதம். | (2) அவ்விஞ்ஞானத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதமானது. |

என்று இப்படி அத்வைதிகளும், பௌத்தர்களும் ஒரேவிதமான தத்வத்தை அங்கீகரித்திருக்கிறார்களென்று கௌடபாதீயகாரிகா, சங்கரபாஷ்யம், ஆனந்தகிரீயம், மிதாக்ஷரா, கௌடபாதீயவிவேகம், (25) ஸம்க்ஷேபஶாரீரகம், சங்கரவிஜயம் இவைகளே முதலிய அத்வைதிகளின் நூல்களினாலேயே தெரியவந்துக்கொண்டிருப்

---

(25) ननु सर्वस्यापि वियदादि प्रपंचस्य स्वप्नतुल्यत्वे तद्विज्ञानात्मकमेव सर्वं वक्तव्यं ततश्च विज्ञानवादिसमयप्रवेशापत्तिरिति शंकते—

"ननु शाक्यभिक्षुसमयेन समः प्रतिभात्ययं च भगवत्समयः ।
यदि बाह्यवस्तु वितथं नु कथं समयाविमौ सदृशौ भवतः ॥"

(संक्षेपशारीरकम् २—२५)

नन्विति । शाक्यौ जिनबौद्धौ विज्ञानवादी तत्सिद्धान्तेनेत्यर्थः । भगवतो व्यासभगवत्पादादेः (शंकराचार्यस्य) समय इत्यर्थः । ननु विज्ञानवादिना वेदप्रामाण्याद्यनभ्युपगमात् कथं तदभ्युपगंतृ भगवत्समयस्य तत्समय तुल्यतेति चेत्सत्यं । तथापि—विज्ञानातिरिक्त विज्ञेयानभ्युपगमे कथं न तत्तौल्यं तेनापि तथैवांगीकारादित्याह—यदीति । बाह्यं विज्ञानातिरिक्तं वस्तु वितथमलीकं कथन्विति संबंधः ॥

व्यतिरेकमुखेन उक्तमतद्वयसाम्यमन्वयेनाप्याह—

"यदि बोध एव परमार्थवपुर्न तु बोध्यमित्यभिमतं भवति ।
ननु चाश्रितः भवति बुद्धमुनेर्मतमेव कृत्स्नमिह मस्करिभिः ॥"

(सं. शा. २—२६)

பதிஞல்—அத்வைதமதம் விஞ்ஞானவாதிகளான பௌத்தர்களின் மதமே என்று கோர்ட்டார் தீர்மானிக்கிறுர்கள்.

"விஞ்ஞானமொன்றே தத்வம், அந்த விஞ்ஞானத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதம் என்கிற அம்ஸத்தில் இரண்டு மதங்களுக்கும் ஸாம்யமிருந்தபோதிலும்—அத்வைதிகளின் விஞ்ஞானம் (ப்ராஹ்மம்) உபனிஷத்திஞலேயே அறிவதற்கு யோக்யமானது, ஒன்றேயானது, (ஏகத்வமுடையது) நித்யமானது, (நித்யத்வமுடையது). பௌத்தர்களின் விஞ்ஞானம் உபனிஷத்திஞல் அறிவதற்கு யோக்யமல்ல, அநேகமானது, (அநேகத்வமுடையது) க்ஷணிகமானது, (க்ஷணிகத்வமுடையது) என்று இரண்டுமத தத்வங்களுக்கும் பேதமிருப்பதிஞல் இரண்டு மதங்களும் வேருனது" என்று அத்வைதிகள் சொல்லுவது சரியானதல்லவென்று கோர்ட்டார் நிராகரிக்கிறுர்கள். எப்படி எனில்:—

ப்ராஹ்மணுதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், வேதம், வேதாத்யயனம், யஞ்ஞம், தேவதைகள், பகவத்பூஜை, கர்த்ருத்வம், ஸ்வர்க்காதி பரலோகங்கள் முதலியவைகளெல்லாம் ஞானத்தில் கல்பிதங்கள். ஞானமொன்றே ஸத்யம் என்று பௌத்தர்களைப்போலவே அத்வைதிகளும் ஒத்துக்கொண்டபின், அந்தஞானம் நித்யமாஞலென்ன? அநித்யமாஞலென்ன? ஒன்றேயாஞலென்ன? அநேகமாஞலென்ன? ஆஸ்திகர்களைப்போல் வேதாத்யயனம், யஞ்ஞம், ஸ்நானம், ஸந்த்யா, பகவத் பூஜை இவைகளைச் செய்வது அத்வைதிகளுக்குப் பொருந்தாததிஞல்—அத்வைதிகளும் பௌத்தர்களைப்போல் நாஸ்திகர்களே, அவைதிகர்களேயாகிறுர்கள். ஆகையால் அத்வைதஞானம் நித்யமானது, ஏகத்வமுடையது என்கிற விசேஷம் அனுபயுக்தமானது.

வாஸ்தவமாய் விசாரிக்குங்கால் அத்வைதிகளின் ஞானம் நிர்விசேஷமும், பேதம் முதலிய ஸகல தர்மரஹிதமுமாகையிஞல், அந்தஞானத்தில் ஏகத்வமுமில்லை, நித்யத்வமுமில்லை, உபனிஷத்வேத்யத்வமுமில்லை, பௌத்தரிட ஞானத்தின் பேதமுமில்லை.

பௌத்தரின் விஞ்ஞானமும் நிர்விசேஷமாகையால் அந்த ஞானத்தில் க்ஷணிகத்வமுமில்லை, அநேகத்வமுமில்லை. மற்றும்

ஸகலகால வ்ருத்தித்வம் (எல்லா காலத்திலிருப்பது) என்கிற நித்யத்வம் அநேக பதார்த்தங்களுடன் கூடினது (ஸகண்டமானது). அத்வைதிகளின் ப்ரஹ்மரூபஞானம் அகண்டமானது. ஆகையால் ஸகண்டமான நித்யத்வம் அகண்டமான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமென்கிறது பொருந்துகிறதில்லை. 'நகேவலத்வம்' (தஶஸ்லோகீ.) என்கிற ஶ்லோகத்தினால் ஏகத்வம் அவித்யாகல்பிதமானதால் ப்ரஹ்மத்தினிடத்தில் இல்லை என்று சங்கராசார்யர் சொல்லியிருப்பதினால்—ஏகத்வம் அத்வைதிகளின் ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) இல்லை. ஸத்யமான ஞானஸ்வரூபமும் ஆகமாட்டாது. பௌத்தரின் விஞ்ஞானம் அகண்டமும் நிர்விசேஷமுமாகையால் (ஸகல தர்மரஹிதமுமாகையால்) பௌத்தரின் விஞ்ஞானத்தில் அநேகத்வமில்லை, க்ஷணிகத்வமுமில்லை. க்ஷணிகத்வாதிகள் ஸகண்டமாகையால்பௌத்தரின் அகண்டமான ஞானஸ்வரூபமாகிறதில்லை. 'கிஞ்ச ஆலயவிஞ்ஞானம் ஸ்தாயிசேத் நாமாந்தரேண அஸ்மதாத்மைவ ஸ்யாத்' என்கிற ஸம்க்ஷேப ஶாரீரகத்தின் 2-6-9வது ஶ்லோக வ்யாக்யானத்தில்—'பௌத்தரின் ஆலய விஞ்ஞானம் ஸ்தாயி (நித்யம்) ஆயின் அது நம்மிட ப்ரஹ்மமே' என்று மதுஸூதன ஸரஸ்வதியவர்கள் சொல்லியிருப்பதினாலும்; 'ஆலய விஞ்ஞானம் ஸமஸ்தவாஸனாதாரமப்யுபகச்சன் அக்ஷரம் (அவிநாஶினம்), ஆத்மானமப்யுபைதி' என்கிற 2-2-32வது ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானத்தில் ஆலயவிஞ்ஞானம் நித்யமானது என்று பௌத்தர் ஒத்துக்கொள்ளுகிறார்களென்று பாமதீகாரர் சொல்லியிருப்பதினாலும், பௌத்தர்களின் விஞ்ஞானம் அத்வைதிகளின் ப்ரஹ்மமே என்று சித்திக்கிறதினால் அத்வைதிகளின் ஞானத்திற்கும் பௌத்தரின் ஞானத்திற்கும்—நித்யத்வம், க்ஷணிகத்வம், ஏகத்வம், அநேகத்வம் இவ்விஷயங்களில் ஒன்றும் விசேஷமில்லை.

ஶப்தங்கள் ஒரு வஸ்துவை போதிக்கவேணுமாயின் அந்த வஸ்துவினிடத்தில்—த்ரவ்யம், குணம், கர்மம், ஜாதி, பேதம், ஸம்பந்தம் இவைகளில் யேதாவது ஓர் தர்மமிருக்கவேண்டும்' அத்வைதிகளின் ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) மேற்சொல்லப்பட்ட தர்மங்களில் எந்த தர்மமுமில்லாததினால் அத்வைதிகளின்

ஞானம் (ப்ரஹ்மம்) எந்த ஶப்தத்தினாலும் போத்யமாகாததினால் உபநிஷதேககம்யத்வம் (உபநிஷத்தினாலேயே அறியப்படும் தன்மை) அத்வைதிகளின் ஞானத்தில் இருப்பற்கு சாத்யமில்லை. ஆகையால்-பௌத்தர்களின்விஞ்ஞானத்திற்கும், அத்வைதிகளின் ஞானத்திற்கும் உபநிஷதேகவேத்யத்வாவேத்யத்வத்தினாலும், பேதம் வருகிறதில்லை என்று சித்தமாகிறது. ஜகத்து கல்பிதமான தென்பதை இருவரும் ஒத்துக்கொள்ளுகிறதினால் அத்வைத மதமும் விஞ்ஞானவாதிகளான பௌத்தரின் மதமும் ஒன்றே யாகிறதென்று கோர்ட்டார் தீர்மானித்திருக்கிறார்கள். ஆகையால்:-

## டிக்ரீ.

(1) அவைதிகமான (வேதத்தினால் சித்தமாகாத) அத்வைத மதத்தை ப்ரதிவாதிகள் வைதிகமானதென்று உபதேசிக்கக் கூடாது.

(2) ஸாத்விகஜனங்கள் அந்த அத்வைதிகளின் உபதேசத்தைக்கேட்டு, அத்வைதமதத்தின்படிக்கு 'அஹம் ப்ரஹ்ம' என்று உபாஸனை செய்யக்கூடாது.

(3) இவ்வுத்திரவைமீறி அத்வைதிகள் அப்படியேஉபதேசித்த போதிலும், ஸாத்விக ஜனங்கள் அவ்வுபதேசத்தைக்கேட்டு அந்த அத்வைத மதத்தின்படிக்கு உபாஸனை செய்தபோதிலும்—அவர்கள் 'மாமப்ராப்யைவ கௌந்தேய ததோயாந்த்யதமாம் கதிம்' என்று சிக்ஷாநியமம் (கீதா) 16 வது செக்ஷனில் (அத்யாயத்தில்) சொல்லப்பட்டிருக்கும் தண்டனையை அடைவார்கள்.

(4) "யதாபஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்மயோனிம் ததாவித்வான் புண்யபாபே விதூய நிரஞ்ஜன: பரமம் ஸாம்யமுபைதி" "யோமாமேவ மஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம்......இதி புத்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பாரத" "அணுவ்ருத்திஶ் ஶப்தாதணுவ்ருத்திஶ் ஶப்தாத்" இவைகளே முதலிய வாக்யங்களினால் ஶ்ருதி கீதா ஸூத்ரங்களில் சொல்லப்பட்டிருப்பதுபோல் — "பரமாத்மா ஸர்வோத்தமன் ஜகஜ்ஜன்மாதிகர்த்தா, சதுர்முக ப்ரஹ்மாதி எல்லா ப்ராணிகளுக்

கும் தந்தை என்று தெரிந்துக்கொண்டு, அந்தப்படிக்கு உபாஸனே செய்து, ப்ரஹ்மாபரோக்ஷ ஞானத்தை ஸம்பாதித்துக்கொண்டு, "ஸ ஏஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச்சரீராத்............பரம்ஜ்யோதிருப ஸம்பத்ய ஸ்வேன ரூபேணுபிநிஷ்பத்யதே, ஸ தத்ரபர்யேதி ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:, காமான்னீ காமரூப்யனுஸஞ்சரன்" இவைகளே முதலிய ஶ்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறபடிக்கு பரமாத்மனே யடைந்து, பந்தத்தைப் போக்கடித்துக்கொண்டு வைகுண்டாதிகளில் இஷ்டமான பலங்களே அனுபவித்துக்கொண்டு, ஸாமகானத்தினல் பரமாத்மனே துதித்துக்கொண்டே ஸுகமனுபவித்துக் கொண்டிருக்க வேண்டியதென்று ஜனங்களின் நன்மைக்காக கோர்ட்டாரால் டிக்ரீ கொடுக்கப்பட்டிருக்கிறது.

Samyamanipuram,
10-3-1929.

S.. DHARMA RAJ, H B.
*Chief Judge,*
*High Court.*

श्रीयज्ञवराहसमेत श्रीरामपूजा.



श्रीमुष्णं समवाप्य भूरिविभवैर्गत्वा च देवालयं
नत्वा यज्ञवराहमूर्तिममलां श्रीमूलमूर्तिंपुनः ।
आनीय स्वमठं यथाक्रममम्मुं देवं वराहं तथा
सत्यध्यानयतिः प्रपूजयति वै श्रीमूलरामं सुधीः ॥

ஸ்ரீ:

# ஸம்பமணீபுரம் ஹைகோர்ட்.

சீப்ஜஸ்டிஸ் S. தர்மராஜ், H. B. அவர்களிட சமுகத்தில் நடந்த

வேதாந்த விசாரணை

# ஸிவில் ஸூட்.

## O. S. No. 564 of 1921.

### 5-வது இஷ்யூ

[(a) அத்வைதமதம் பௌத்தமதத்தைவிட வேறானதா அல்லது ஒன்றுதானா? (b) அத்வைதமதம் வைதிகமா (வேதத்தினால் ஸித்தமானதா) அல்லது அவைதிகமா (வேதத்தினால் ஸித்தமாகாததா, அல்லதுவேதத்திற்கு விருத்தமா) என்கிற ஐந்தாவது வாதாம்ஸ.]

### விசாரணை.

---

விஷ்ணுதாஸாசார்யர்— ... வாதி.

கங்காதர சாஸ்திரிகள்— ... பிரதிவாதி.

### வாதி விசாரணை.

---

*கோர்ட்:—உம்மிட பெயரென்ன?*

*வாதி:—விஷ்ணுதாஸாசார்யர்.*

*கோர்ட்:—ஈஶ்வரஸாக்ஷியாக கோர்ட்டார் முன்னிலையில் நாம் சொல்லுவதெல்லாம் நிஜமே என்று சொல்லும்.*

*வா. வி.:—ஈஶ்வர சாக்ஷியாக கோர்ட்டார் முன்னிலையில் நாம் சொல்லுவதெல்லாம் நிஜமேயொழிய பொய்யல்ல.*

*கோர்ட்:—உம்மிட தாவா என்ன?*

*வா. வி.:—அத்வைதமதமும் பௌத்தமதமும் ஒன்றேயாகையால் அத்வைதமதம் பௌத்த மதத்தைப்போலவே அவைதிக*

மானது, (வேதத்தினால் சித்தமாகாததும் தவிர, வேதத்திற்கு விருத்தமுமானது), அனர்த்தங்களுக்குகாரணமாகையால், மோக்ஷம் முதலிய பலன்களை அபேக்ஷிக்கும் வைதிகரான ஆஸ்திக ஜனங்களால் அங்கீகரிப்பதற்கு யோக்யமானதல்ல. மோக்ஷாதி பலன்களை அபேக்ஷிக்கிறவர்கள் அந்த அவைதிகமான அத்வைத மதத்தைவிட்டு வைதிகமான த்வைதமதத்தையே ஆஶ்ரயிக்கும்படிக்கு உத்திரவு ஆகவேணுமென்பதே நம்மிட தாவா.

---

## பிரதிவாதி விசாரணை.

கோர்ட்:—உம்மிட பெயரென்ன?

பிரதிவாதி:—கங்காதர சாஸ்திரிகள்.

கோர்ட்:—தைவ சாக்ஷியாக கோர்ட்டார் முன்னிலையில் நாம் சொல்லுவதெல்லாம் நிஜமே என்று சொல்லும்.

பி. வா.:—நம்மிட மதப்ரகாரம் ப்ரஹ்மத்தை விட வேறான பாரமார்த்திக ஸத்யமான பதார்த்தமே இல்லை. எல்லாம் வ்யாவஹாரிக ஸத்யமேயாகையால், பாரமார்த்திக ஸத்யமாய்ச் சொல்லுகிறோமென்று சொல்லுவதற்கு ஸாத்யமில்லாததினால் தைவ ஸாக்ஷியாக கோர்ட்டார் முன்னிலையில் நாம் சொல்லுவதெல்லாம் வ்யாவஹாரிக ஸத்யமேயொழிய பொய்யல்ல என்று சொல்லுகிறோம்.

கோர்ட்:—உம்மிட சொல்கை (Statement) என்ன?

பி. வா.:—நம் அத்வைத மதம் பௌத்தமதமல்ல. அத்வைத மதம் வேறு, பௌத்தமதம் வேறு. அத்வைதமதம் வைதிகமானது, பௌத்தமதம் அவைதிகமானது. அத்வைதமதத்தின்படிக்கு நடக்கிறவர்களுக்கு மஹாபுருஷார்த்த லாபமுண்டு.

கோர்ட்:—த்வைத மதத்தின்படிக்கு நடக்கிறவர்களுக்கு பலன் உண்டோ இல்லையோ?

பி. வா:—த்வைதமதத்தின்படிக்கு நடப்பவர்களுக்கு பலனுண்டு. நாங்களும் த்வைதமதப்ரகாரம், ப்ராஹ்மணாதி வர்ணங்

களுக்கும், பிரஹ்மசர்யாத்யாஸ்ரமங்களுக்கும் வேதங்களினால் விஹிதமான ஸ்நான ஸந்த்யா யஞ்ஞ கங்காதி தீர்த்தஸ்னான வேதாத்யயன, ஶ்ரவண மனனத்யானங்களை முதலியவைகளைச் செய்கிறோம். ஆயினும், அந்த த்வைதமதத்தின்படிக்கு ஆசரித்து ஸகுணபிரஹ்ம ஞானத்தை அடைந்தபக்ஷத்தில் வைகுண்ட ப்ராப்தியாகுமேயொழிய, நிர்குண ப்ரஹ்மபாவரூப மோக்ஷம் கிடைக்கமாட்டாது. நம்மிட மதப்பிரகாரம் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என்று த்யானம் செய்து ப்ரஹ்மாபரோக்ஷத்தை அடைந்த பக்ஷத்தில் அந்த நிர்குணப்ரஹ்ம பாவரூபமோக்ஷம் கிடைக்கும். த்வைதமதம், அதின்படிக்கு ஆசரணை, அதினாலுண்டாகும் பலன் இவைகள் கீழ்த்தரமானது (Lower stage). நம் அத்வைதமதம், அதின்படிக்கு ஆசரணைகள், அதினாலுண்டாகும் பலன் (நிர்குண ப்ரஹ்ம பாவரூப மோக்ஷம்) இவைகள் மேற்தறமானது (Higher stage). ஆகையால் த்வைத மதத்தின்படிக்கு ஆசரிப்பதனாலுண் டாகும் பலன் உத்தமமல்ல. நம்மத்வைதமதமே உத்தமமானது அத்வைத மதத்தின்படிக்கு ஆசரிப்பதினாலேயே உத்தமமான பலன் கிடைக்கும்.

*பி. வா.*:—(To the Court) My Lord! இந்த வாதத்தின் விசாரணையில் பிரதிவாதி வாதியை தானே ஸ்வயம் விசாரிப்பதற் காக அபேக்ஷிக்கிறார். அதற்கு கோர்ட்டார் உத்திரவு கொடுக்க வேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறோம்.

கோர்ட்:—Mr. தாஸ்! Mr. சர்மா சொல்லியதை கேட்டீ ரல்லவா? அதற்கு உம்மிட அபிப்ராயமென்ன?

*வா. வ.*:—Your Honour! நம்மிட கக்ஷிதாரரான வாதியும் பிரதிவாதியை க்ராஸ் செய்ய உத்திரவாயின் வாதி ப்ரதிவாதிகள் அவரவர்களே க்ராஸ் செய்துக்கொண்டு தங்கள் தங்கள் அபிப் ராயங்களை ஆதாரங்களோடு கோர்ட்டார் முன்னிலையில் ஹாஜர் படுத்த நமக்கொன்றும் ஆக்ஷேபணை கிடையாது.

கோர்ட்:—மிஸ்டர் சர்மா! மிஸ்டர் தாஸ் சொல்லியவாறு வாதி ப்ரதிவாதிகள் தங்கள் தங்கள் ஆதாரங்களையும் பிறருடைய

தோஷங்களையும் கோர்டாரிட பார்வையில் வைக்கட்டும். மத்தியில் வேண்டிய விஷயங்களை நீங்களும் வாதிவக்கீலும் க்ராஸ் செய்யலாம். கோர்டாரும் ஆவஶ்யகமானவிஷயங்களை விசாரிப்பார்கள்.

*வா. வ:—ப்ர. வ.:—எஸ்; எஸ்.*

*பி. வா.:—ஆசார்யரே!* நம் சங்கராசார்யர் அவைதிகமான பௌத்த மதத்தைக் கண்டித்து, வைதிக மதத்தை ஸ்தாபித்திருக்க (உலகத்தில் பரவச்செய்திருக்க) சங்கராசார்யரிட அத்வைதமதம் பௌத்தமதமென்று நீங்கள் சொல்லுவது எப்படி யுக்தமாகும்?

*வா. வி.:—சாஸ்த்ரிகளே!* இந்த க்ரந்தத்தைப் பார்த்திருக்கிறீரோ?

*பி. வா.:—பார்த்திருக்கிறோம்.*

*வா. வி.:—இது என்ன க்ரந்தம்?*

*பி. வா.:—இது* நம் சங்கராசார்யர் செய்த ஸர்வஸித்தாந்த ஸங்க்ரகம்.

*வா. வி.:—** இந்த ஸ்லோகங்களுக்கு அர்த்தமென்ன?

*பி. வா.:—பூர்வகாலத்தில்* பௌத்தர்களே முதலான நாஸ்திகர்களால் நாசப்படுத்தப்பட்டிருந்த வேதமார்க்கத்தை குமாரரின் அம்ஶரான பட்டாசார்யர் உலகத்தில் நிலைநிருத்தினர். வேதபாஹ்யரான ஜனங்களை நிராகரித்து பட்டாசார்யரால் அனுசரிக்கப்பட்ட மார்க்கத்தில் (ஜனங்கள் நடந்தனர்) என்று அர்த்தம்.

*வா. வி.:—இந்த ஶ்லோகங்களினால்—*பௌத்தமதத்தை கண்டித்து, வைதிகமதத்தை நிலைநிருத்தினவர் யாரென்று சங்கராசார்யர் சொல்லியிருக்கிறார்?

---

* பௌத்தாதி நாஸ்திக த்வஸ்த வேதமார்க்கம் புரா கில। பட்டாசார்ய: குமாராம்ஶ: ஸ்தாபயாமாஸ பூதலே। வேதபாஹ்யான்னிராக்ருத்ய பட்டா சார்யைர்கதே பதி (சா. ஸர்வஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்.)

பி. வா.:—குமாரிலபட்டரே பௌத்தமதத்தைக் கண்டித்து, வைதிகமதத்தை ஸ்தாபித்தாரென்று சங்காசார்யர் சொல்லி யிருக்கிறார்.

வா. வி.:—இது எந்த க்ரந்தம்?

பி. வா.:—ஆனந்தகிரியவர்களால் இயற்றப்பட்ட சங்கர விஜயம்.

வா. வி.:— * இவ்வாக்யத்தின் அபிப்ராயமென்ன?

பி. வா.:—பட்டாசார்யரென்கிற ஓர் ப்ராஹ்மண சிரேஷ்டர் வடதேசத்திலிருந்து வந்து, துஷ்டமதத்தை ஆஶ்ரயித்திருந்த அநேக பௌத்தர்களை அநேகவிதமான ஶாஸ்த்ரார்த்த விசாரங்களினால் வென்று, இராஜாக்களின் சகாயத்தினால் அப் பௌத்தர்களின் தலைகளை கோடாலியினால் வெட்டுவித்து உரலில்போட்டு பொடிசெய்வித்து, துஷ்டமதத்தை நாசப்படுத்தி நிர்பயராய் இருக்கிறாரென்கிற அத்புதமான கார்யத்தை சங்கராசார்யர் கேட்டு, சிஷ்யர்களுடன், ஜயஶப்தத்தோடு கூடியிருக்கும் 'ருத்தா' என்கிறநகரத்திற்கு வந்தார். அப்போது குமாரிலபட்டாசார்யார் சங்கராசார்யரைக் குறித்து "புதிய பௌத்த ஶ்ரேஷ்டனே! (புதிய வழியில் பௌத்தமதத்தை ஸ்தாபிப்பதற்காகப் புறப்பட்டிருப்பவனே!) நான் ஜாக்ரதையா யிருக்கும்போது நீ வராமற்போனாய். இப்போது நான் முழங்கால் வரைக்கும் சுடப்பட்டிருக்கிறேன். இக்காலத்தில் உன்னுடன் என்னவாதம் செய்வேன்" என்று சொல்லியிருக்கிறார் என்று அபிப்ராயம்.

---

* பட்டாசார்யாக்யோத்விஜவர: கஶ்சிதுதக்தேஶாதாகத்ய துஷ்டமதாவலம்பினோ பௌத்தான் ஜைனானஸங்க்யான் ராஜமுகாதனேக வித்யா ப்ரஸங்கபேதைர்நிர்ஜித்ய ஏஷாம் ஶீர்ஷாணி பரஶுபிஶ்சித்வா பஹுஷு உலூகலேஷு நிக்ஷிப்ய கடப்ரமணைஶ்சூர்ணீக்ருத்ய சைவம் துஷ்டமதத் வம்ஸமாசரன் நிர்பயோ வர்ததே. ஶ்ருத்வைதத்புதம் கர்ம குரு: (சங்கர:) சிஷ்யஸமன்வித: ப்ராப்தோ ருத்தாக்ய நகரம் ஜயசப்த விஜ்ரும்பிதம் ததனு—ஜானுமாத்ர ப்ரதக்தோபி பட்டாசார்ய: தம் (சங்காசார்யம் ப்ரதி) ஜாக்ரத்காலானுகதோ நூதனே பௌத்ததர: இதி ப்ராஹேத்யாதி (ஆனந்தகிரிய சங்கரவிஜயம்.)

வா. வி.:—இந்த சங்கரவிஜய வாக்யத்தினுல் பௌத்த மதத்தை யார் கண்டித்தனரென்று சித்திக்கிறது?

பி. வா.:—குமாரிலபட்டரே கண்டித்ததாக சித்தமாகிறது.

வா. வி.:—இந்த க்ரந்தத்தைப் பார்த்திருக்கிரீரு? என்ன க்ரந்தம்? யார் செய்தது?

பி. வா.:—பார்த்திருக்கிறேம். சங்கரவிஜயம். நம் வித்யாரண்யர் செய்தது.

வா. வி.:—* இந்த ஶ்லோகங்களுக்கு அபிப்ராயமென்ன?

பி. வா.:—குமாரிலபட்டர் பௌத்தபண்டிதர்களுடன் வாதம் செய்து அவர்களை வென்றுர். பிறகு ஸுதன்வா என்கிற ராஜனுல் ஆஸேது ஹிமாசலம் வரைக்குமுள்ள வேதத்வேஷம் செய்யும் ஆபால வ்ருத்தர்களான பௌத்தர்களை ஸம்ஹாரம் செய்ய வேண்டியது. எந்த சேவகன் அப்படிச் செய்கிறதில்லையோ அந்த ஸேவகனையும் ஸம்ஹாரம் செய்யவேண்டியதென்று சட்ட மேற்படுத்தி, பௌத்தர்களைக் கொல்லுவித்தார். இவ்விதமாக குமாரிலபட்டரென்கிற சிங்கத்தினுல் பௌத்தர்களென்கிற யானைகள்கொல்லப்படவே, வேதங்களின் கிளைகளெல்லாம் (எல்லா வேதங்களும்) தடையாதுமின்றி எல்லா தேசங்களிலும் அபிவ்ருத்தியடைந்தன. (தேசங்களிலுள்ள ஜனங்களெல்லாம் வேதத்தில் சொல்லியவாரு நடந்துக்கொள்ள ஆரம்பித்தனர்) என்று அபிப்ராயம்.

---

* உபன்யஸத்ஸு ஸாக்ஷேபம் கண்டயத்ஸு பரஸ்பரம்। தேஷு ஶ்ருதிவிஷ்டன்னிர்கோஷோ பிந்தன்னிவ ரஸாதலம்। அத: பேதுர்புதேந்த்ராணும் க்ஷுதா: பக்ஷேஷு தத்க்ஷணம்। வ்யூட கர்கஶ தர்கேண ததாகத தராதரா:। நிரஸ்தாகில ஸந்தேஹோ வின்யஸ்தேதர தர்ஶனுத்। வ்யதாதாஞ்ஞாம் ததோ ராஜா வதாய ஶ்ருதிவித்விஷாம்। ஆஸேதோ ராதுஷாராத்ரே: பௌத்தானு வ்ருத்த பாலகம்। ந ஹந்தி யஸ்ஸஹந்தவ்யோ ப்ருத்யாநித்யன்வஶான்ருப: குமாரில ம்ருகேந்த்ரேண ஹதேஷு ஜினஹஸ்திஷு। நிஷ்ப்ரத்யூஹமவர்த்தந்த ஶ்ருதிஶாகாஸ்ஸமந்தத: (வித். சங். வி.)

வா. வி.:—வித்யாரண்யர் செய்த சங்கரவிஜயத்திஞல் பௌத்த் மதத்தைக் கண்டித்தவர் யாரென்று சித்தமாகிறது?

பி. வா.:—குமாரிலபட்டர் கண்டித்தனரென்று சித்தமாகிறது.

வா. வி.:—ஆஞல் உங்கள் சங்கராசார்யர் கண்டிக்கவில்லையல்லவா?

பி. வா.:—குமாரிலபட்டர் பௌத்தமதத்தைக் கண்டித்த பிறகு மருபடியும் அம்மதம் விருத்தியடையவே, அப்போது சங்கரர்சார்யார் கண்டித்தாரென்று சொல்லலாமல்லவோ? அப்படியிருக்க சங்கராசார்யர் பௌத்தமதத்தைக் கண்டிக்கவில்லை என்று எப்படிச் சொல்லக்கூடும்?

வா. வி:—குமாரிலபட்டர் துஷ்டமான பௌத்தமதத்தை த்வம்ஸம் செய்து, ஆபாலவ்ருத்தரான எல்லா பௌத்தரையும் கொல்லுவித்து வேதத்தை பாதகண்டத்தில் நிலைநிருத்தியிருக்கும் காலத்தில், சங்கராசார்யர் சீடர்களுடன்கூடி குமாரிலபட்டரைக் காணுவதற்காகச் சென்றனரென்று சொல்லியிருக்கிறபடியால், அக்காலத்தில் சங்கராசார்யர் ப்ரௌடாவஸ்தை யுள்ளவராகத்தானிருக்கவேணும். மற்றும் அவரிட ஆயுளும் 32 வயதே இருக்க அதற்கு மத்தியிலுள்ள கொஞ்சகாலத்தில் பௌத்தமதம் தலை எடுப்பதற்கே அவகாசமில்லாமலிருக்க, சங்கராசார்யர் அம்மதத்தைக் கண்டித்திருக்கலாமென்று சொல்லுவது யுக்தமல்ல.

பி. வா:—ஆசார்யரே! நீர் சொல்லியவாரு சங்கராசார்யரிட காலத்திலேயே குமாரிலபட்டர் பௌத்தமதத்தைக் கண்டித்தார், எல்லா பௌத்தரையும் கொல்லுவித்தார், பௌத்தர்களே இல்லாததிஞல் பௌத்தமதப்ரசாரமே இல்லை, அதைக் கண்டிப்பதற்கு சங்கராசார்யருக்கு ப்ரஸக்தியே இல்லையென்று சித்தமாகட்டும். ஆயினும் சங்கராசார்யர் பௌத்தமதத்திற்கே அத்வைத மதமென்று பெயரிட்டு உலகத்தில் ப்ரசித்தப்படுத்திஞரென்று நீரெப்படிச் சொல்லுகிறீர்? அதர்க்காதாரமென்ன?

வா. வி.:—* பார்வதி தன்னிட பர்த்தாவாகிய ஈஶ்வரனைக் குறித்து தாமஸஶாஸ்த்ரங்களை யார் யார் இயற்றியிருக்கிறுரென் பதைத் தாங்கள் எனக்குச் சொல்லவேணுமென்று கேழ்க்கவே, அதற்கு ஈஶ்வரன் என்னிடசக்தியுடன் கூடியிருக்கும் கௌதமரே முதலியவர்களால் நியாயஶாஸ்திரம் முதலிய நூல்கள் இயற்றப் பட்டன. மஹாவிஷ்ணு புத்தரூபத்தைத்தரித்து பௌத்தஶாஸ்த் ரத்தை இயற்றினுர். எந்த மாயாவாதமென்கிற துஷ்டமான அத் வைதஶாஸ்திரம் ப்ரச்சன்ன பௌத்தஶாஸ்த்ரமென்று பிரசித்த மாயிருக்கிறதோ அந்த மாயாவாதஶாஸ்த்ரம் ப்ராஹ்மணரூபி யான என்னுல் இயற்றப்பட்டது. அந்தமாயாவாத ஶாஸ்த்ரத்தில் ஶ்ருதிகளுக்கு லோகநிந்திதமான அர்த்தங்களைச் சொல்லி, ஜீவ பரமாத்மாக்களுக்கு ஐக்யத்தையும், மற்றும் ப்ரஹ்மம் நிர்குண மானது (ஸகல தர்மரஹிதமானது) என்றும் சொல்லப்பட்டிருக் கிறதென்று பத்மபுராணத்தில் சொல்லப்பட்டிருப்பதினுல், மாயா வாதிமதமும் (அத்வைதமதமும்)பௌத்தமதமும் ஒன்றே என்று தெரியவருகிறது. மற்றும் † பிருஹத்ப்ரஹ்மஸம்ஹிதைஎட்டா

---

* பார்வத்யுவாச:—தாமஸானி ச ஶாஸ்த்ராணி ஸமாசக்ஷ்வ மமானக। ஸ ப்ரோக்தானி ச யைர்விப்ரைர் பகவத்பக்தி வர்ஜிதை:। தேஷாம் நாமானி க்ரமஶ: ஸமாசக்ஷ்வ ஸுரேஶ்வர। ருத்ரவுவாச—ஶ்ருணு தேவி ப்ரவக்ஷ்யாமி தாமஸானி யதாக்ரமம்। யேஷாம் ஸ்மரணமாத்ரேண பாதித்யம் ஞானி னமபி। ப்ரதமம் ஹிமயா ப்ரோக்தம் ஶைவம் பாஶுபதாதிகம்। மச்சக்த்யா வேஶிதைர்விப்ரை: ப்ரோக்தானி சதத: ஶ்ருணு। கணுதேந து ஸம்ப்ரோக்தம் ஶாஸ்த்ரம் வைஶேஷிகம் மஹத்। கௌதமேன ததா ந்யாயம் ஸாங்க்யம் து கபிலேனவை। திஷணேன ததா ப்ரோக்தம் சார்வாகமதி கர்ஹிதம்। தைத்யா னும் நாஶநார்த்தாய விஷ்ணுனு புத்தரூபிணு। பௌத்தஶாஸ்த்ரமஸத் ப்ரோக்தம் நக்ன நீல படாதிகம்। மாயாவாதமஸத்சாஸ்த்ரம் ப்ரச்சன்னம் பௌத்த முச்யதே। மயைவ கதிதம் தேவி கலௌ ப்ராஹ்மணரூபிணு। அபார்த்தம் ஶ்ருதிவாக்யானும் தர்ஶயன் லோககர்ஹிதம்...பரேஶ ஜீவயோரைக்யம் மயா து ப்ரதிபாத்யதே। ப்ரஹ்மணேஶ்ய ஸ்வயம் ரூபம் நிர்குணம் லக்ஷ்யதே மயா। ஸர்வஶ்ய ஜகதோப்யத்ர மோஹனுர்த்தம் கலௌயுகே। வேதார்த்த வன் மஹாஶாஸ்த்ரம் மாயாவாதமவைதிகம் (பத்மபுராணம்)

† ராஜன் கார்யஸ்ய மித்யாத்வம் நைர்குண்யம் பரமாத்மன:। ஆபாஸ வாதோ ஜீவஸ்ய பாஷண்டைருபகல்பித:। நைதத்விஶ்வஸநீயம் தே மயோக்த

வது அத்யாயத்தில் ஜகத்துமித்யை (பொய்) பரமாத்மா நிர்குணன் (ஸகல தர்மரஹிதன்) ஜீவன் பரமாத்மாவின் ஆபாஸன் என்கிற மதம் பாஷண்டிகளால் சொல்லப்பட்டது. இம்மதத்தை வாஸுதேவனின் ஆஞ்ஞையினுல் தைத்யர்களின் மோகனுர்த்தமாக என்னுல் சொல்லப்பட்டது. அதில் விஶ்வாஸம் செய்யக்கூடாது. இம் மாயவாத ஶாஸ்திரம் மாயாமோகனுல் (புத்தனுல்) சொல்லப்பட்டது என்று இவ்விதமாகமாயாவாதமதம் பௌத்தமதமே என்று சொல்லப்பட்டிருக்கிறது.

"யத்ஶூன்யவாதினும் ஶூன்யம் ப்ரஹ்ம ப்ரஹ்மவிதாம் சயத்" என்கிற ஸர்வசித்தாந்த ஸங்கிரஹத்திலுள்ள சங்கராசார்யரின் வாக்யத்தில் ஶூன்யவாதிகளின் ஶூன்யமெதுவோ ப்ரஹ்மவாதிகளின் ப்ரஹ்மமெதுவோ அதை ஞானி அடைகிறுனென்று சொல்லியிருப்பதினுல் ஶூன்யமும் ப்ரஹ்மமும் ஒன்றே என்று சித்திக்கிறபடியால் அத்வைதமதமும் பௌத்தமதமும் ஒன்றேயாகிறது. மற்றும் "யத்யபி பாஹ்யார்த்த நிராகரணம் ஞானமாத்ர கல்பனு சாத்வய வஸ்து சாமீப்ய முக்தம் ஞானஞேயஞாத்ரு பேதாரஹிதம் பரமார்த்த தத்வமத்வய மேதன்னபுத்தேன பாஷிதம்: இதம்து பரமார்த்த தத்வ மத்வைதம் வேதாந்தேஷ்வேவ விஞ்ஞேயமிதி" என்கிற சங்கராசார்யரின் வாக்யத்தினுலும் "ஞானம் நைதத் புத்தேனபாஷிதம்" என்கிற கௌடபாதரின் வாக்யத்தினுலும் "ஞானமாத்ரம் பாரமார்த்திகம் தத்ரைவஞாத்ரு ஞேயாதி கல்பிதமிதி ஸௌகதமதமேவ பவதாபி சங்க்ருஹீதமித்யாஶங்க்யாஹ" என்கிற ஆனந்தகிரி டீகாவாக்யத்தினுலும், சங்கராசார்யரின் பரமகுருவான கௌடபாதாசார்யரின் காலத்திலேயே (அத்வைத மதம் வெளியில் பிரசாரத்திற்கு வந்த காலத்திலேயே) ஞானமொன்றே தத்வம், ப்ராஹ்மணுதிவர்ணங்கள் முதலான எல்லா ஜகத்தும் அஞ்ஞானத்தினுல் கல்பிதமென்கிற அத்வைதமதம் பௌத்தமதமே என்று அக்காலத்திலுள்ள வித்வான்கள் சொல்லி

---

மபிமாயயா। ஆஞ்ஞயா வாஸுதேவஸ்ய மோஹனுய ஸுராத்விஷாம்। ப்ரவர்திதமஸத்ஶாஸ்த்ர மயதார்த்தஸ்ய ஶாஸனுத்। மாயாவாதமிதம் ஶாஸ்த்ரம் மாயாமோஹ ப்ரவர்திதம்.

யிருப்பதினாலும் பௌத்தமதத்தையே அத்வைதமதத்தார் ஸ்வீ கரித்திருக்கிறார்கள் என்று நாம் சொல்லுகிறோம்.

சங்கராசார்யரின் ஸமகாலீனரான பாஸ்கராசார்யர் 2-2-29 வது "வைதர்ம்யாச்ச ந ஸ்வப்னாதிவத்" என்கிற ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் "யே து பௌத்தமதாவலம்பினோ மாயாவாதி னஸ்தேப்யனேன ந்யாயேன ஸூத்ரகாரேணைவ நிரஸ்தா வேதி தவ்யா:" என்கிற வாக்யத்திலும்; 1-4-25வது ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தில் "மஹாயானிக பௌத்தகாதிதம் மாயாவாதம் வ்யா வர்ணயந்தோ லோகான் வ்யாமோஹயந்தி" என்கிற வாக்யத் தினாலும் அத்வைதமதமும் (மாயாவாதி மதமும்) பௌத்தமத மும் ஒன்றே என்றும்; ஸூத்ரகாரால் நிராகரிக்கப் பட்டிருக்கிற தென்றும் சொல்லி யிருக்கிறார். மற்றும் விஞ்ஞானபிக்ஷு என் கிறவரும் தாம்செய்த ஸூத்ரபாஷ்யத்தில்"யே துரஜ்ஜு ஸர்பாதி வத் பிரபஞ்சஸ்ய அத்யந்த துச்சத்வ மிச்சந்தி தேது பௌத்தப்ர பேதாஏவ" "மாயாவாத மஸத்சாஸ்த்ரம் ப்ரச்சன்னம் பௌத்த முச்யதே. இத்யாதி புராணவசனாத்." "அஸத்யமப்ரதிஷ்டம் தேஜகதாஹுரனீச்வரமிதிகீதாவசனாத்" என்கிற வாக்யங்களில் அத்வைதமதம் பௌத்தமதமே என்று பத்மபுராண கீதாவாக்யங் களின் சம்மதி கொடுத்து சொல்லியிருக்கிறார். மற்றும் இவரே ஸாங்க்யப்ரவசன பாஷ்யத்தின் உபக்ரமத்திலும் இப்படியே (மாயாவாதமதம் பௌத்தமதமே) என்று சொல்லியிருக்கிறார்.

பார்த்தஸாரதிமிஸ்ரர் சாஸ்த்ரதீபிகையில் "தத்வரம் அஸ் மன்மாயாவாதாத் மஹாயாநிகவாத:" என்று அத்வைதமதத்தை விட பௌத்தமதமே மேலானது (அத்வைதமதம் பௌத்த மதத்தைவிட கீழானது) என்று சொல்லியிருக்கிறார்.

ஆனந்தகிரி என்பவரால் செய்யப்பட்ட சங்கரவிஜயத்தில் குமாரிலபட்டர் சங்கராசாரியரைக் குறித்து 'நூதனோ பௌத்த தர:' புதிய பௌத்தசிரேஷ்டனே என்று அழைத்திருக் கிறார்.

ராமானுஜாசாரியார் முதலிய அநேக க்ரந்தகாரர்கள் அத் வைதமதமும் பௌத்தமதமும் ஒன்றே என்று சொல்லியிருக்கிறார்

கள். மற்றும் ஸர். எஸ். ராதாகிருஷ்ணன் M. A. D. Litt. முதலிய ஆங்கில பாஷாபண்டிதர்களும் மேற்சொல்லிய கிரந்தங்களையெல்லாம் ஆராய்ந்து அத்வைதமதம் பௌத்தமதமே என்று நிரூபித்திருக்கிறார்கள். இவைகளே முதலான அனேக ஆதாரங்களினால் அத்வைதமதம் பௌத்தமதமே என்று நிச்சயமாகிறது.

பி. வ:—ஆசார்யரே! உங்கள் வார்த்தைகளுக்கு எனக்கு நகைப்பு வருகிறது. அப்படியே கோர்ட்டாருக்கும் வரக்கூடும். ஏனெனில்—எல்லா மதத்திற்கும் பிரதிவாதிகள் இருக்கின்றனர். அத்வைதமதத்திற்கும் அக்காலத்திலிருந்தே ப்ரதிவாதிகள்உளர். அவர்கள் அத்வைதமதத்தை அவைதிகமான பௌத்தமதம் என்று நிந்தித்து இருக்கக்கூடும். இப்பொழுதும் நிந்திக்கக்கூடும். த்வேஷமூலகமான அந்த தூஷணவாக்யங்கள் பிரமாணங்கள் (நிஜமான ப்ரமேயங்களை அறிவிக்கின்றவைகள்) என்று சொல்லுவதை எப்படி நம்பக்கூடும்? உங்கள் மதத்தை தூஷிக்கிறவர்கள் இல்லையோ? யாரோ த்வேஷமூலகமாக அத்வைதமதமும்பௌத்த மதமும் ஒன்றே என்றுசொல்லும் வாக்யத்தினால் அத்வைத மதமும் பௌத்தமதமும் ஒன்றே என்று நிஶ்சயமாகாது என்ற விஷயம் சிறு பிள்ளைகளுக்கும் தெரிந்ததே ஆகும். உம்மைப் போன்ற வித்வான்கள் த்வேஷிகளின் வார்த்தைகளை முக்யமாக வைத்துக்கொண்டு அத்வைதமதம் பௌத்தமதமே என்று சொல்லக்கூடுமா?

வா. வி:—(To the Court) நியாயாதிபதிகள் இவ்விஷயத்தை கவனிக்கவேணும்.

மிஸ்டர் ஸர்மா! கோர்ட்டில் ஒருவன் ஒரு விஷயத்தில் சாக்ஷி சொல்லின் அந்த சாக்ஷி சொல்லியது நிஜமென்கிற விஷயத்தில் மற்றொரு சாக்ஷி அதற்கு மற்றொரு சாக்ஷி, வேணுமோ?

பி. வ:—இல்லை, ஒரு சாக்ஷி சொல்லவே அதற்கு பாதகமில்லாவிடின் அதை நிஜமென்றே ஒப்புக்கொள்ள வேண்டும். அந்த சாக்ஷி கீழானவனாய் இருந்தபோதிலும் மேன்மையுடையவனாய் இருந்தபோதிலும் அவன் சொல்லியதற்கு பாதகம் வந்தால்தான் அவன் சொல்லுவது பொய்யென்று அறியவேண்டும். அதற்காக

கோர்ட்டில் சாக்ஷி சொல்லியபிறகு அதற்கு பாதகத்தை அறிவிப்ப தற்காக அந்தசாக்ஷியை உனக்கும் வாதிக்கும் பந்துத்வம்உண்டோ என்று கேட்கிறோம். அதற்கு அவன் உண்டென்று சொன்னால் இச்சாக்ஷி வாதியிடத்தில் இருக்கும் சிநேகத்தினால் பொய் சொல்லுகிறான், ஆகையினால் இவனுடையபேச்சை நம்பக்கூடாது என்று தள்ளிவிடுகிறோம். அல்லது அந்த சாக்ஷியைக் குறித்து உனக்கும் ப்ரதிவாதிக்கும் விரோதமுண்டோ? நீ பிரதிவாதியுடன் சண்டையிட்டு உன்பேரில் மாஜிஸ்ட்ரேட் கேஸ் ஆயிருக்கிறதல்லவா? என்று கேட்டதற்கு அந்த சாக்ஷி அதை ஒத்துக்கொள்வானேயாகில், அந்த சாக்ஷிக்கும் பிரதிவாதிக்கும் த்வேஷமிருப்பதினால் இவன் நிஜத்தைசொல்லுகிறதில்லை என்று அந்தசாக்ஷியை தள்ளிவிடுகிறோம். அல்லது அந்த சாக்ஷியை நீ வாதிவீட்டில் புசிக்கிறாய் அல்லவா என்று கேட்கவே அவன் அதை ஒத்துக் கொள்வானேயாகில் இவன் வாதிவீட்டில் புசிக்கிரவனாகையால் வாதிக்கு அநுகூலமாக சொல்லாவிடின் அவனுக்கு வாதி அன்னமிடமாட்டானாகையால் இவன் பொய் சொல்லுகிறான், ஆகையால் அந்த சாக்ஷியை அப்ரமாணம் என்கிறோம். மற்றும் ஞானத்திலும் கர்மத்திலும் தனத்திலும் பெரியவனாய் உண்மை உரைப்போனாய் ப்ரஸித்தி பெற்றிருக்கும்சாக்ஷி பின்சொல்லிய சாக்ஷிக்கு விருத்தமாகச் சொல்வானேயாகில் அந்த முதல்சாக்ஷி சொல்லியது பொய்யென்று நிச்சயமாகிறது. இத்தகைய பாதகங்கள் ஒன்றும் இல்லாவிடின் எத்தகைய மனிதனாகிலும் அவனிட சாக்ஷியம் ப்ரமாணமாகிறது.

வா. வி:—மிஸ்டர் சர்மா! ப்ரகிருதம் என் அபிப்ராயமும் அதுதான். ஒரு ஸாக்ஷி சொன்னதற்கு விருத்தமாக மற்றொரு ஸாக்ஷி சொல்லாவிட்டால் முதல் ஸாக்ஷியால் சொல்லப்பட்டதே ஸத்யமானதென்று கோர்ட்டில் எப்படி ஒப்புக்கொள்ளுகிறார்களோ, அப்படியே எந்த வேதவாக்யமாவது, ப்ரத்யக்ஷமாவது, அனுமானமாவது, ஸாக்ஷிவாக்யமாவது எந்த அர்த்தத்தை எப்படி தெரிவிக்கிறதோ அதற்கு பாதகமில்லாவிடில், அந்த அர்த்தத்தை அப்படியே இருக்கலாமென்று ஒப்புக்கொள்ளவேணும், பாதகம் வரில் அந்த வாக்யம்முதலியவைகளால் தெரியவரும் பதார்த்தம்

அஸத்யமானதென்று அறியவேணும் என்கிற விஷயத்தை த்வைதாத்வைத வாதிகள் இருவரும் ஒப்புக்கொண்டிருக்கிறோம். ப்ரக்ருதம்-பாஸ்கராசார்யர், விஞ்ஞானபிக்ஷு, ராமானுஜாசார்யர், பட்டகுமாரர், பார்த்தஸாரதிமிஶ்ரர் முதலானபண்டிதர்கள்—அத்வைதமதம் பௌத்தமதமே என்று சொல்லியிருக்கிறார்கள். அதற்கு பாதகம் இல்லாததினால் அதை ஸத்யமென்றே ஒப்புக்கொள்ளவேணும். இதுவுமன்றி பத்மபுராணம் முதலிய புராணங்களில் ஸாக்ஷாத் நாராயணாவதாரரான வேதவ்யாஸர் முதலானவர்கள் அத்வைத மதம் பௌத்தமதமே என்று சொல்லியிருக்கிறார்கள். கௌடபாதாசார்யர், சங்கராசார்யர் முதலான அத்வைதிகளும் அத்வைத மதத்துக்கும் பௌத்தமதத்துக்கும் ஸாம்யம் உண்டு என்று சொல்லியிருக்கிறார்கள். அதற்கு-பௌத்தர்கள் சீனதேசத்தில் இருக்கிறார்கள். நாம் பரதகண்டத்தில் இருக்கிறோம்; பௌத்தர்கள் கருப்புத்துணிகளைக் கட்டிக் கொள்கிறார்கள், நாம் வெள்ளைத் துணிகளைக் கட்டிக்கொள்கிறோம்; அவர்கள் பஸ்மத்தை (சாம்பலை) பூசிக்கொள்வதில்லை, நாம் பூசிக்கொள்ளுகிறோம்; அவர்கள் பாஷை வேறு, நம்முடைய பாஷை வேறு இதுமுதலான அனுபயுக்தமான விஷயங்களில் பேதத்தைச் (வைஷம்யத்தை) சொல்லாமல், ப்ரஹ்மம், ஜகத்து, மோக்ஷஸாதனம், வேதம், ப்ரமாணம், அப்ரமாணம் இவைபோன்ற முக்ய விஷயங்களில் பௌத்தமதத்திற்கும் அத்வைத மதத்திற்கும் பேதம் உண்டு, ஸாம்யமில்லை என்று எதுவரைக்கும் ப்ரதிவாதிகள் சொல்லுவதில்லையோ, அதுவரையில் அத்வைதமதமும் பௌத்தமதமும் ஒன்றே என்பது தவறாது. அத்வைதமதத்துக்கும் பௌத்தமதத்துக்கும் அவ்விதமான வைஷம்யமே இல்லை என்று எங்களபிப்ராயம்.

பி. வா:—ஆசார்யரே! ஆஸ்திக சிரோமணிகளான எங்களுடைய அத்வைத மதத்தில் வேதோக்தமான ப்ராஹ்மணாதி வர்ணங்களையும் ப்ரஹ்மசர்யம்முதலிய ஆஶ்ரமங்களையும் அடைந்து ஸ்நானம், ஸந்த்யாவந்தனம், பகவத்பூஜை, யாகம், தானம் முதலிய கர்மங்களைச் செய்துகொண்டு அந்த கர்மங்களினால் ஶுத்தமான மனதுடையவர்களாய் ஶ்ரவணமனனத்யானங்களைச்செய்து,

பரமாத்மாவின் அபரோக்ஷத்தை யடைந்து, ப்ரஹ்மபாவரூபமாகிய மோக்ஷத்தை அடையத்தகுந்தது என்று சொல்லியிருக்கிறது. பௌத்தமதத்தில் வேதம் அஸத்யம் (பொய்), அதற்கு ப்ராமாண்யமில்லை, ப்ராஹ்மணாதி வர்ணங்களில்லை, ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஶ்ரமங்களில்லை, ஸ்நானம், ஸந்த்யா, பகவத்பூஜை, யஞ்ஞம் முதலியவைகளில்லை, ப்ராஹ்மபாவப்ராப்தி ரூப மோக்ஷமில்லை; இப்படிப்பட்ட பௌத்தமதத்தை அத்வைதமதமென்று சொல்லுவதைப் பார்த்தால் இன்றைக்கு ஏகாதசியாயிருப்பதால் தங்களுக்குக் கொஞ்சம் பித்தம்அதிகமாயிருப்பதாகத் தோன்றுகிறது. ஸ்வாமி! கோபம் செய்யக்கூடாது. ஸாவகாசமாக பார்த்துசொல்லுங்கள்.

*கோர்ட்:*—ஆசார்யரே! சாஸ்திரிகள்சொல்லியவாறு அத்வைதமதம் பரம ஆஸ்திகமான வைதிகமதம்போலவே தோன்றுகிறது. பௌத்தர்கள், அவைதிகர்கள், வேத ப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளார். வேதோக்தமான யஞ்ஞாதி கர்மங்களையும் ஒப்புவதில்லை. இப்படியிருக்க அத்வைதமதத்தை பௌத்தமதமென்று எப்படிச் சொல்லுகிறீர்? ப்ரதிவாதிகள் கேள்விக்கு ஸமாதானம் சொல்லும்.

*வா. வி:*—கோர்ட்டாரவர்கள் உத்தரவு ப்ரகாரம் சொல்லுகிறோம். கோர்ட்டாரவர்களும் மனம் தாழ்த்திக்கேழ்கக் கோருகிறோம்.

*வா. வி:*—சாஸ்திரிகளே! ஆஸ்திகர்களென்றால் எவர்? நாஸ்திகர்களென்றால் எவர்?

*பிர. வா:*—* பரலோகம் உண்டு, அதற்கு ஸாதனமும் உண்டு, அதற்கு பலதாதாவான ஈஶ்வரனுமுண்டு என்கிற புத்தியுள்ளவன் ஆஸ்திகன். பரலோகமில்லை, அதற்கு ஸாதனமில்லை, அதற்கு பலத்தைக்கொடுக்கும் ஈஶ்வரனுமில்லை என்கிறபுத்தியையுடையவன் நாஸ்திகன்.

---

* அஸ்திபரலோக இதி புத்திர்யஸ்ய ஸ ஆஸ்திக: நாஸ்தி பரலோக இதி புத்திர்யஸ்ய ஸநாஸ்திக: மித்யா த்ருஷ்டிர்நாஸ்திகதா.

வா. வி:—ஸ்வர்க்கம் முதலிய பரலோகங்களில்லை, அதற்கு ஸாதகங்களான யஞ்ஞம் முதலிய கர்மங்களில்லை, அதற்கு பலமளிப்பவனான ஈஶ்வரனில்லை என்று சொல்லுகிறவர்கள் ஆஸ்திகர்களா? நாஸ்திகர்களா?

பிர. வா:—ஸ்வர்க்காதி பரலோகங்களும் அதற்கு ஸாதகங்களான யஞ்ஞாதிகளும் பலமளிப்பவனான ஈஶ்வரனும் இல்லை என்பவன் நாஸ்திகனே, ஸந்தேகமென்ன?

வா. வி:—பரலோகமில்லை, இந்த ப்ரத்யக்ஷ ஸித்தமான லோகமுமில்லை என்று சொல்லுபவர்கள் நாஸ்திகர்களா? அல்லது ஆஸ்திகர்களா?

பிர. வா:—பரலோகமில்லை, இந்த லோகமுமில்லை என்று சொல்லுபவர்கள் நாஸ்திகர்கள் மாத்திரமல்ல, நாஸ்திக நாஸ்திகர்கள் (மஹா நாஸ்திகர்கள்.)

வா. வி:—பௌத்தர்கள் இந்த லோகத்தையும் பரலோகத்தையும் அவைகளுக்கு ஸாதனங்களையும் பொய்யென்று சொல்லுகிறார்களாகையால் அவர்கள் நாஸ்திக நாஸ்திகர்களே யல்லவா?

பிர. வா:—ஸம்ஶயமென்ன? பௌத்தர்கள் பரமநாஸ்திகர்களே.

வா. வி:—சாஸ்திரிகளே! "ப்ரஹ்ம ஸத்யம்ஜகந்மித்யாஜீவோ ப்ரஹ்மைவ நாபர:" என்கிற ஶ்லோகத்தைச் செய்தவர் யார்?

பிர. வா:—நம்மிட சங்கரபகவத்பாதரே செய்திருக்கிறார்.

வா. வி:—அதினபிப்ராயமென்ன?

பிர. வா:—ப்ரஹ்மமொன்றே ஸத்யம். அந்த ப்ரஹ்மத்திடத்தில் ப்ராஹ்மணாதி வர்ணங்களும், ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஶ்ரமங்கள், ஸ்நாநம், ஸந்த்யா, யஞ்ஞம், வேதம், தீர்த்தம், ஸ்வர்க்கம், முதலிய பரலோக இஹலோகங்கள் இவைமுதலான

ஸமஸ்தஜகத்து கல்பிதம், ஜீவன் ப்ரஹ்மமே என்று அபிப்ராயம்.

வா. வி:—ப்ராஹ்மணவர்ணம் முதலிய எல்லா ஜகத்தும் கல்பிதமென்றால் என்ன அர்த்தம்?

பிர. வா:—ஆசார்யரே! இது ப்ரஸித்தமான விஷயம்தான். ஆனாலும் சொல்லுகிறேன், கேளும். முத்துச்சிப்பியில் நிஜமாய் இல்லாமலிருக்கும் வெள்ளி எப்படி அஞ்ஞாநத்தினால் தோன்றுகிறதோ, கயற்றில் நிஜமாய் இல்லாத ஸர்ப்பம் எப்படி தோன்றுகிறதோ, மேலும் ஸ்வப்னத்தில் இல்லாத வஸ்துக்கள் எப்படி தோன்றுகிறதோ அப்படியே எப்போதுமில்லாத ப்ராஹ்மணவர்ணம் முதலிய ஜகத்து அஞ்ஞானத்தினால் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் ஜகத்து மூன்றுகாலத்திலும் இல்லவேயில்லை என்றே அர்த்தம்.

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! இன்றைக்கு சிவராத்ரியாகையால் உம்முடைய மனது ஸ்திரமாக இல்லை எனத்தோன்றுகிறது. இஹலோக பரலோகங்கள், அவைகளுக்கு ஸாதனங்கள், பலதாதாவான ஈஶ்வரன் இவைகள் இல்லை என்று சொல்லும் பௌத்தர்களை நாஸ்திக நாஸ்திகர்கள் (மஹாநாஸ்திகர்கள்) என்று சொல்லவேணுமென்று நீங்களே சொல்லுகிறீர்கள். அவர்களைப்போலவே நீங்களும் (அத்வைதிகளும்) இஹலோகமில்லை பரலோகமில்லை, அவைகளுக்கு ஸாதனமுமில்லை, பலப்ரதாதாவான ஈஶ்வரனுமில்லை என்று சொல்லிக்கொண்டே நாங்கள் (அத்வைதிகள்) ஆஸ்திக சிரோமணிகளென்று சொல்லிக் கொள்ளுகிறீர்கள். இது எப்படி யுக்தமாகும்? பௌத்தர்களைப்போலவே நாஸ்திகசிரோமணிகளென்று சொல்லுவதே யுக்தமாகுமல்லவா?

பி. வா:—ஆசார்யரே! நம்முடைய மதம் உமக்கு சரியாக தெரியுமென்று தோன்றவில்லை. நாங்கள் ஜகத்து கல்பிதம் என்று சொன்னாலும், வ்யாவஹாரிக ஸத்யம் என்று சொல்லுகிறோம். இஹலோகம், ஸ்வர்க்காதி பரலோகங்கள், அவைகளுக்கு ஸாதனங்கள், அவைகளைக் கொடுக்குமீஸ்வரன், ப்ராஹ்மணாதி வர்ணங்கள் இவைமுதலிய எல்லா ஜகத்தும் வ்யாவஹாரிக ஸத்யமானதென்று

சொல்லுகிறோம். பௌத்தர்களைப்போல் அத்யந்தாஸத்யமான தென்று சொல்லுவதில்லை. ஆகையால் நாங்கள் (அத்வைதிகள்) பௌத்தர்களைப்போல் நாஸ்திக நாஸ்திகர்கள் (நாஸ்திகசிரோமணிகள்) எப்படியாவோம்? நீங்கள் நாஸ்திக சிரோமணிகளென்று சொன்னாலும் பேதபுத்தியில்லாத எங்களுக்கு கோபமில்லை. ஆனாலும் கோர்ட்டில் சொல்லக்கூடிய விஷயங்களைப் பார்த்து (யோசித்து) பேசவேணுமென்கிற அம்சத்தை மனதில் வைத்துக் கொள்ளவேணும்.

வா. வி:—ஶாஸ்திரிகளே! லௌகிகவிசாரம் அப்படி இருக்கட்டும். நாம் இஹலோக பரலோகம் முதலிய ஜகத்து வ்யாவஹாரிக ஸத்யம் என்று சொல்லுகிறோமாகையால், நாஸ்திகர்கள் அல்ல என்று சொல்லுவது சரியல்ல. வ்யாவஹாரிக ஸத்யத்வத்தை ஜகத்துக்கு சொன்னாலும் நாஸ்திகத்வம் போகாது. அத்வைதிகளைப்போலவே பௌத்தர்களும் ஜகத்துக்கு வ்யாவஹாரிகமான உண்மையை ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆகையால் பௌத்தர்கள் ஜகத்துக்கு வ்யாவஹாரிகமான ஸத்யத்வத்தை சொல்லவில்லை என்பது சரியல்ல.

பிர. வா:—பௌத்தர்கள் ஜகத்துக்கு வ்யாவஹாரிக ஸத்யத்வத்தை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு ஆதாரமென்ன?

வா. வி:—"த்வே ஸத்வே ஸமுபாஶ்ரித்ய புத்தானாம் தர்மதேஶனா।லோகே ஸாம்வ்ருத ஸத்யத்வம் ஸத்யம் ச பரமார்த்தத:" என்கிற வாக்யத்தினால் பௌத்தமதத்தில் வ்யாவஹாரிகஸத்யம், பாரமார்த்திக ஸத்யம் என்று ஸத்யங்கள் இரண்டுவிதமாக இருக்கின்றனவென்று தெரியவருகிறது. மேலும் ஸாம்வ்ருத ஸத்யம் (ஆவித்யக ஸத்யம்=வ்யாவஹாரிக ஸத்யம்) பாரமார்த்திக ஸத்யம் என்று ஸத்யங்கள் இருவகைகள் என்று பௌத்தர்கள் சொல்லவே * "ஸத்யம் சேத் ஸம்வ்ருதி: கேயம்" இது முதலான

---

* ஸத்யம் சேத் ஸம்வ்ருதி: கேயம்ருஷா சேத்ஸத்யதா கதம் ஸத்யத்வம் நச ஸாமான்யம் ம்ருஷார்த்த பரமார்த்தயோ: துல்யார்த்தத்வேபி தேனைஷாம் மித்யா ஸம்வ்ருதி ஶப்தயோ: வஞ்சனார்த்த முபன்யாஸ: லாலா

ஶ்லோகங்களால் ஸத்யமாகில் ஸாம்வ்ருதஸத்யம் (அபத்தஸத்யம்=வ்யாவஹாரிக ஸத்யம்) என்பது எப்படிப் பொருந்தும்? ம்ருஷா=அபத்தமாகில் ஸத்யம் என்று சொல்லுவது எப்படி? அபத்த பதார்த்தத்திலும், நிஜமான பதார்த்தத்திலும் ஸத்யத்வம் என்கிற தர்மமில்லை. (பரமார்த்தஸத்ய பதார்த்தத்துக்கும் அபத்த பதார்த்தத்துக்கும் ஸத்யமென்று பெயரில்லை) வக்த்ராஸவம் என்றாலும் ஜொள்ளுநீரே. லாலாஎன்றாலும் ஜொள்ளுநீரே. ஆயினும் ஜனங்களை வஞ்சிப்பதற்காக எப்படி 'லாலா' 'வக்த்ராஸவம்' என்று வேறுவேறு பதங்களை உபயோகிக்கிறார்களோ, அப்படியே மித்யா, அபத்தம், ஸம்வ்ருதி (ஸாம்வ்ருத ஸத்யம்=வ்யாவஹாரிக ஸத்யம்) என்கிற பதங்களுக்கு ஒரே அர்த்தம் இருந்த போதிலும் ஆஸ்திக ஜனங்களை மோசம் செய்வதற்காக அபத்தம் என்கிற சொல்லுக்கே 'மித்யா' என்று சொல்லாமல் ஸம்வ்ருதி (ஸம்வ்ருதஸத்யம்=வ்யாவஹாரிக ஸத்யம்) என்றுசொல்லுகிறார்களேயொழிய, வாஸ்தவமாக எது இல்லையோ, அது இல்லவேயில்லை. எது உள்ளதோ அது பாரமார்த்திகஸத்யமானதே. பௌத்தர்கள் அபத்தமான பதார்த்தங்களுக்கே வ்யாவஹாரிக ஸத்யம்) ஸம்வ்ருதஸத்யம்) என்று வஞ்சனார்த்தமாக சொல்லுகிறார்கள் என்று குமாரிலபட்டர் சொல்லி இருப்பதால், பௌத்தர்கள் வ்யாவஹாரிக ஸத்யத்தை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்று ஸித்தமாகிறது. வெகுவாகச்சொல்லுவானேன்—சங்கராசார், பாமதீகாரர், (வாசஸ்பதிமிஶ்ரர்) இவர்கள் பௌத்தர்கள் ஜகத்து ஸத்யமல்ல என்று சொல்லவே பௌத்தர்களின்பேரில் "ஶூன்யவாதிபக்ஷஸ்து ஸர்வப்ரமாண விப்ரதிஷித்த இதி தன்னிராகரணாயநாதர: க்ரியதே" என்கிற வாக்யத்தினால் ப்ரமாணங்கள் ஜகத்திற்கு ஸத்யத்வத்தை விஷயீகரிக்கின்றன. ஜகத்து ஸத்யமல்லவென்று சொன்னால் ப்ரமாணவிரோதம் வருகிறதென்று சொல்லியிருக்

---

வக்த்ராஸவாதிவத்। நாஸ்திக்ய பரிஹாரார்த்தம் ஸம்வ்ருதி: கல்பனேதி ச.........தஸ்மாத்யன்னாஸ்தி நாஸ்த்யேவ யதஸ்தி பரமார்த்தத: தத்ஸத்யமன்யன்மித்யேதி ந ஸத்யத்வய கல்பனா। நஹி ஸ்வப்னஸாகாத்யர்த்தம் தர்மேகஶ்சித்ப்ரவர்ததே.

கிறார்கள். அதற்கு ப்ரமாணங்கள் ஜகத்துக்கு வ்யாவஹாரிகமான ஸத்யத்வத்தை விஷயீகரிக்கின்றன (அறிவிக்கின்றன). நாங்கள் (பௌத்தர்கள்) ஜகத்துக்கு பாரமார்த்திகமான ஸத்யத்வத்தை தடை செய்கிறோம். இப்படி விஷய பேதமிருப்பதால் ப்ரமாண விரோதம் வருகிறதில்லை என்று பௌத்தர்கள் சொல்லவே, அவர்களிட மதத்தைக்கண்டிப்பதற்காக ப்ரவ்ருத்தமான "நஹ்யயம் ஸர்வப்ரமாண ப்ரஸித்தோ லோகவ்யவஹாரோங்யத் தத்வ மனதிகம்ய ஶக்யதேபஹ்நோதும், அபவாதாபாவே உத்ஸர்க்க ப்ரஸித்தே:" என்கிற இந்த பாஷ்யத்திற்கு வ்யாக்யானம் செய்யும்போது "ப்ரமாணானிஹி ஸ்வகோசரே ப்ரவர்த்தமானானி தத்வமிதமித்யேவ ப்ரவர்த்தந்தே. அதாத்விகத்வம்து தத்கோசரஸ்யான்யதோ பாதகாதவகந்தவ்யம், ந புன: ஸாம்வ்யவஹாரிகம் ந: ப்ராமாண்யம் ந து தாத்விகமித்யேவ ப்ரவர்த்தந்தே" என்கிற வாக்யத்தினால் ப்ரமாணங்கள் தம் தம் விஷயங்களை தாத்விக (பாரமார்த்திக) ஸத்யங்களென்றே விஷயீகரிக்கின்றன. வ்யாவஹாரிக ஸத்யங்களென்று க்ரஹிப்பதில்லை என்று கண்டித்திருப்பதால், பௌத்தர்கள் ஜகத்திற்கு வ்யாவஹாரிகமான ஸத்யத்வத்தை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்று ஸித்தமாகிறதாகையால் பௌத்தர்களும் அத்வைதிகளும் ஜகத்திற்கு வ்யாவஹாரிக ஸத்யத்வத்தை சொல்லிக்கொண்டிருக்க பௌத்தர்கள் மாத்திரம் நாஸ்திகநாஸ்திகர்களாக எப்படியாவார்கள்? அவர்கள்போலவே ப்ராஹ்மணாதி வர்ணம் முதலிய ஜகத்திற்கு வ்யாவஹாரிக ஸத்யத்வத்தைச் சொல்லும் அத்வைதிகள் நாஸ்திக நாஸ்திகர்களாக ஏன் ஆகமாட்டார்கள்? என்பதற்குக் காரணமில்லை. ஆகையால் அத்வைதிகளும் பௌத்தர்களைப் போலவே நாஸ்திக நாஸ்திகர்களே.

கோர்ட்:—பரலோகம் இல்லை என்பவர்களே நாஸ்திகர்கள். அத்வைதிகள் பரலோகம் முதலியவை வ்யாவஹாரிக ஸத்யமானவைகள் என்கிறார்கள். ஆகையால் அத்வைதிகள் நாஸ்திகர்களாக எப்படி யாவார்கள்?

வா. வி:—தார்மப்ரபோ! "வஞ்சனார்த்தமுபன்யாஸோ லாலா வக்த்ராஸவாதிவத், நாஸ்திக்ய பரிஹாரார்த்தம் ஸம்வ்ருதி: கல்பனேதிச" என்று பௌத்தர்களைக் கண்டிக்கும் ஸமயத்தில் குமாரிலபட்டர் சொல்லியபடிக்கு ஜகத்து அபத்தமென்றுசொன்னால் தங்களை நாஸ்திகர்கள் என்று ஜனங்கள் சொல்லுவார்கள். தங்களை (அத்வைதிகளை) நாஸ்திகரென்று சொல்லக்கூடாதென்று (நாஸ்திக்ய வ்யாவஹாரத்தை பரிஹரிப்பதற்காக) ஸ்வர்க்கம் முதலிய பரலோகங்கள், புண்யம், பாவம் முதலியவைகளும் அஸத்யமானவைகளென்று தம் மனதில் நினைத்திருப்பினும், பரலோகம் முதலியவைகள் வ்யாவஹாரிகமான ஸத்யங்கள் என்று சொல்லி இருக்கிறாரேயொழிய, வாஸ்தவமாக விசாரம் செய்யுமளவில்—வ்யாவஹாரிகமான ஸத்யமென்றால் சுக்திரஜம் (முத்துச்சிப்பியில் காணப்படும் வெள்ளி) ம்ருகத்ருஷ்ணிகா, (கானல்) ரஜ்ஜு ஸர்ப்பம்=கயற்றில் தோன்றும் பாம்பு இதுகளைப்போல அஸத்யம்=மூன்று காலத்திலும் இல்லாதது என்று "வ்யாவஹாரிக விஷயஸ்ய ஶுக்திரூப்யாதிவத் கதாசித்பாத்யத்வாத் பாத்யவிஷயேச வ்யாவஹாரிக ப்ராமாண்யமிதி வ்யவஹாரஸ்ய அத்வைதி பரிபாஷாமாத்ர ஸித்தத்வாத்" இது முதலிய வாக்யங்களால் அத்வைதிகளே சொல்லியிருப்பதால், எப்போதுமில்லை என்றாலும், வ்யாவஹாரிக ஸத்யமென்றாலு மொன்றேயாகையால் பரலோகம் முதலியவை எக்காலத்திலுமில்லை என்பவர்கள் எப்படி நாஸ்திகர்களோ அப்படியே வ்யாவஹாரிக ஸத்யம் என்பவர்களும் நாஸ்திகர்களே.

வா. வ:—ஜகத்து கல்பிதம் என்கிற விஷயத்திலும், ஜகத்து வ்யாவஹாரிக ஸத்யம் என்கிற விஷயத்திலும், வ்யாவஹாரிகஸத்யம் பாரமார்த்திகஸத்யம் என்று ஸத்யம் இரண்டுவிதங்கள் என்று சொல்லும் விஷயத்திலும் அத்வைதமதம் பௌத்தமதமிவ்விரண்டும் ஒன்றே என்கிற விஷயத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமென்று ப்ரார்த்தனை.

கோர்ட்:—மிஸ்டர் தாஸ்! அந்தவிசாரம் இப்போதெதற்கு? விசாரணை பூர்த்தியான பிறகு பார்ப்போம். அத்வைதிகள் ப்ரஹ்

மம் தத்வமென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள். சில பௌத்தர்கள் ஸூன்யம் தத்வமென்றுசொல்லுகிறார்கள். சிலபௌத்தர்கள் விஞ்ஞானம் தத்வமென்று சொல்லுகிறார்கள். அந்த முக்யமான விஷயத்தில் அத்வைதிகளுக்கும் பௌத்தர்களுக்கும் பேதம் இருக்கிறதல்லவா? அந்த விஷயத்தில் விசாரம் நடக்கட்டும்.

---

## ஸூன்யவாதி பௌத்தமத அத்வைதமத ஸாம்ய விசாரணை.

வா. வ:—அப்படியே ப்ரபோ. சாஸ்திரிகளே! உங்கள் அத்வைதிகள் ஒப்புக்கொள்ளும் ப்ரஹ்மம் எப்படிப்பட்டது?

பி. வா:—எங்களத்வைத ப்ரஹ்மம் நிர்விசேஷம் = ஸகல தர்ம ரஹிதம், ஸத்யரூபம், ஞானஸ்வரூபம், ஆனந்தஸ்வரூபம், அஞ்ஞேயம் (அறியத்தகாதது) மேலும் அவாச்யம் (சொல்லத்தகாதது).

பி. வா:—ஆசார்யரே! பௌத்தர்கள் ஒப்புக்கொள்ளும் ஸூன்யம் எப்படிப்பட்டது?

வா. வி:—பௌத்தர்களின் ஸூன்ய மிப்படிப்பட்டதென்று நான் சொல்லுவதென்ன? அத்வைத க்ரந்தங்களாலும், பௌத்த க்ரந்தங்களாலும் தெரியவருகிறது. சாஸ்த்ரிகளுக்கு தெரியாததென்ன இருக்கிறது.

பி. வ:—கோர்ட்டில் கேழ்விக்கு உத்தரம் சொல்லவேண்டியது. யாருக்கு தெரிந்திருந்தாலென்ன? தெரியாமலிருந்தாலென்ன?

வா. வி:—அப்படியேசொல்லுகிறேன். பௌத்தர்கள் சொல்லும் ஸூன்யம் நிர்விசேஷம் = ஸகல தர்ம ரஹிதம், ஸத்யம், ஞானஸ்வரூபம், ஆனந்தஸ்வரூபம், அஞ்ஞேயம் (அறியத்தகாதது) மேலும் அவாச்யம் (சொல்லத்தகாதது).

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மமும் பௌத்தர்கள் சொல்லும் ஶூன்யமும் ஒரேமாதிரி இருப்பதால் அத்வைதிகளின் ப்ரஹ்மமும் பௌத்தர்களின் ஶூன்யமும் ஒன்றேயாயிற்றல்லவா?

பி. வா:—ஐயா மாதவதாஸவர்களே! ஶூன்யம் நிர்விசேஷம், ஸத்யம், ஞானஸ்வரூபம், ஆனந்தரூபம், அஞ்ஞேயம், அவாச்யம் என்று பௌத்தர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்களென்கிற விஷயத்தில் ஆதாரம் கொடாமலே நாங்கள் ப்ரஹ்மத்தை எப்படிப்பட்டதென்று சொல்லி இருக்கிறோமோ அப்படிப்பட்டதே ஶூன்யமென்று நீர் சொன்னமாத்திரத்தினால் ஶூன்யமும், ப்ரஹ்மமுமொன்றாகுமா? நான் ஆதாரத்தை (ஸன்னதை) காண்பிக்காமல் நீர் எப்படி வக்கீலாக இருக்கிறீரோ அப்படியே நானும் வக்கீலென்று சொன்னமாத்திரத்தில் நானும் வக்கீலாவேனோ? ஆசார்யரே! ஶூன்யம் நிர்விசேஷம் என்கிற விஷயத்தில் ஆதாரத்தைச் சொல்லும்.

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! இந்த க்ரந்தத்தை பார்த்திருக்கிறீரா?

பி. வா:—பார்த்திருக்கிறோம். இது நம்மிட சங்கரபகவத்பாதாசார்யர்கள் செய்த விஷ்ணுஸஹஸ்ர நாமத்தின் பாஷ்யம்.

வா. வி:—இந்த வாக்யத்தை வாசித்து இதனர்த்தத்தைச் சொல்லும்.

பி. வா:—'நிர்விஶேஷத்வாத் ஶூன்யவத் ஶூன்ய:' ப்ரஹ்மமும் ஶூன்யத்தைப் போலவே நிர்விசேஷமாகையால் ஶூன்யமென்று சொல்லப்படுகிறதென்றர்த்தம்.

வா. வி:—இதனால் ப்ரஹ்மத்தைப்போல் ஶூன்யமும் நிர்விசேஷமானது (ஸகல தர்மரஹிதமானது) என்று ஸித்தமாகிறதா இல்லையா?

பி. வா:—ஶூன்யம் நிர்விசேஷமென்று ஸித்தித்தது. ஸத்யம் என்கிற விஷயத்திலாதாரம் சொல்லும்.

வா. வி:—"த்வே ஸத்வே ஸமுபாஶ்ரித்ய புத்தானாம் தர்மதேஶனா, லோகே ஸாம்வ்ருத ஸத்யம் ச ஸத்யம் ச பரமார்த்தத:"

என்கிற க்ரந்தத்தினுல் ஜகத்து வ்யாவஹாரிக (ஸாம்வ்ருத) ஸத்யம்; ஶூன்யம் பாரமார்த்திக ஸத்யம் என்று ஸித்திக்கிறது. மேலும் "ஶூன்யவாதினும் ஶூன்யதாயா அபி ஸத்யத்வாத்" என்கிறபாமதி வாக்யத்தினுல் ஶூன்யவாதிகளின் ஶூன்யம் ஸத்யமானதென்று ஸித்திக்கிறது.

பி. வா:—சூன்யம் ஸத்யமாகட்டும், நிர்விசேஷமுமாகட்டும். ஞானுநந்தரூபமென்கிறதிலாதாரமென்ன?

வா. வி:—உங்களத்வைத க்ரந்தங்களே ஆதாரங்கள். ப்ரஹ்மத்திற்கு "ஸத்யம் ஞானமானந்தம் ப்ரஹ்ம" என்று ஸத்யஞானுநந்தஸ்வரூபத்வம் லக்ஷணமென்று சொல்லி, இம்மூன்று விசேஷணங்களுக்கும் ப்ரயோஜனம் சொல்லும்போது "ஶூன்யவாதிபிரபி ஸத்வரஹித ஞானுனந்தாத்மகத்வஸ்ய ப்ரஹ்மணோன்யத்ராங்கீகாராத் மிலிதம் விஞ ந நிர்விசிகித்ஸா ப்ரஹ்ம ஸித்திரிதி மிலிதம் லக்ஷணம்" என்கிற அத்வைத ஸித்தி வாக்யத்தினுலும்; "தயா ஞானுத்மகானந்தவத்வம் தன்மதே (ஶூன்யவாதிமதே) ப்ரஹ்ம பின்னேபீதி தத்வாரணுய ஸத்யமிதி" என்கிற கௌட ப்ரஹ்மாநந்தீய வாக்யத்தினுலும் ப்ரஹ்மத்திற்கு ஞானுநந்த ஸ்வரூபத்வம் என்கிற இது மாத்ரமே லக்ஷணமென்று சொன்னுல் சூன்யவாதிகள் அவர்களிட சூன்யத்திற்கும் ஞானரூபத்வமும் ஆநந்தரூபத்வமும் சொல்லுகிறபடியால் அந்த சூன்யத்தில் இந்த ப்ராஹ்ம லக்ஷணம் வருகிறது. ப்ரஹ்மத்தின் லக்ஷணம் சூன்யத்தில் வரப்படாதாகையால் ஸத்யஸ்வரூபத்வமும் ப்ரஹ்மத்திற்கு லக்ஷணமென்று சொல்லவேணுமென்று சொல்லி இருப்பதால் சூன்யமும் ஞானுநந்தாத்மகம் என்று ஸித்திக்கிறது.

பி. வா:—சூன்யம் ஸத்ய ஸ்வரூபமல்ல என்று அத்வைத ஸித்தி ப்ரம்மாநந்தீய க்ரந்தத்தில் சொல்லியிருக்க, சூன்யத்திற்கு ஸத்யரூபத்வத்தை நீர் எப்படி சொல்லுகிறீர்?

வா. வி:—பாமதிமுதலிய அத்வைத க்ரந்தங்களில்—சூன்யம் ஸத்யரூபமென்று சொல்லி இருக்கிறுர். பௌத்த க்ரந்தங்களினுலும் சூன்யம் ஸத்யரூபமென்று சித்தமாயிருப்பதினுல் அந்த

அம்சத்தில் அத்வைதஸித்தி என்னும் க்ரந்தம் க்ராஹ்யமல்ல. மேலும் "ஆகாரஸஹிதா புத்தி: யோகாசாரஸ்ய ஸம்மதா, கேவலாம் ஸம்விதம் ஸ்வஸ்தாம் மன்யந்தே மத்யமா: புன:" (விவேக விலாஸம் 283) "அத்வய ஞானகரூபாம் ஶூன்யதாம் விபாவ்ய ஓம் ஶூன்யதா ஞானவஜ்ர ஸ்வபாவாத்மகோஹம் மித்யதிதிஷ்டேத்" (ஶாந்திபாதீயம்) "கேவலாமத்வய விஞ்ஞப்தி லக்ஷணம்... அனந்தாம் பஶ்யேத் (ரத்னகர ஶாந்திபாதீயம்) இவை முதலிய பௌத்தர்களின் வாக்யங்களினால் சூன்யத்திற்கு ஞானரூபத்வமும் ஞானாத்மகாநந்த ரூபத்வமும் ஸித்தமாகிறது.

பி. வா:—சூன்யம் நம்முடைய ப்ரஹ்மத்தைப் போலவே அஞ்ஞேயமென்றும் அவாச்யமென்றும் எப்படி ஸித்தமாகிறது?

வா. வி:—"நிர்விசேஷம் ஸ்வயம் பாதம் நிர்லேபமஜராமரம், ஶூன்யம் தத்வமவிஞ்ஞேயம் மனோவாசாமகோசரம்" இவை முதலிய பௌத்த வாக்யங்களால் சூன்யம் அவாச்யம் அஞ்ஞேயமென்று ஸித்திக்கிறது. ஆகையால் அத்வைத ப்ரஹ்மம் பௌத்தர்களின் சூன்யத்தைவிட வேறல்லவென்று ஸித்திக்கிறது. மேலும் கடம் படத்தைக் காட்டிலும் வேறாகவேண்டின் கடத்திலில்லாத தர்மம் படத்திலிருக்கவேணும். படத்திலில்லாத தர்மம் கடத்திலிருக்கவேணும். இப்படி இருந்தால்தான் கடபடங்களுக்கு பரஸ்பர பேதம் ஸித்திக்கும். சூன்யத்திலில்லாத தர்மம் நிர்விசேஷமான (ஸகல தர்மரஹிதமான) அத்வைதிகளால் சொல்லப்படும் ப்ரஹ்மத்திலில்லை. ப்ரஹ்மத்திலில்லாத தர்மம் நிர்விசேஷமான சூன்யத்திலில்லை. இப்படி இருப்பதால் அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மத்திற்கு சூன்யத்தைக் காட்டிலும் பேதம் ஸித்திப்பது எப்படி? மேலும் அத்வைதிகள் "யஸ்மின் ந கஶ்சித்விஶேஷோஸ்தி நாமவா ரூபம் வா பேதோ வா ஜாதிர்வா குணோவா தத்வாரேண ஹி ஶப்தப்ரவ்ருத்திர்பவதி. நசைஷாம் கஶ்சித்விசேஷோ ப்ரஹ்மண்யஸ்தி" என்று பேதத்தை ப்ரஹ்மத்திலொப்புக்கொள்ளவில்லை. ஆகையால் அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மம் பௌத்தர்கள் சொல்லும் சூன்யத்தைக் காட்டிலும் வேறல்ல, ஒன்றே என்று ஸித்திக்கிறது.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த க்ரந்தங்கள் எவைகள் என்று உமக்குத் தெரியுமா?

பி. வா:—தெரியும். இது எங்கள் சங்கராசார்யரவர்களின் ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யம். இரண்டாவது அதற்கு வ்யாக்யானமான ப்ரஹ்மவித்யாபரணம் என்கிற க்ரந்தம்.

வா. வ:–இந்தக்ரந்தங்கள் உங்களுக்குமான்யங்களேயல்லவா?

பி. வா:—இந்த க்ரந்தங்களெங்களுக்கு மிகவும் மான்யங்களே என்று ஒப்புக்கொண்டிருக்கிறோம்.

வா. வ:—* இந்த வாக்யத்திற்கு அபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—ஸூத்ரகாரர் ஞானம் ஒன்றே ஸத்யம், அந்தஞானத்தில் ஞாதாஜ்ஞேயம் முதலான எல்லா பாஹ்யப்ரபஞ்சமும் கல்பிதம் என்கிற யோகாசார பௌத்தமதத்தை நிராகரிப்பதற்காக ஸூத்ரங்களை எப்படி செய்தாரோ அப்படி சூன்யம் ஒன்றே தத்வம், சூன்யத்தில் ஸமஸ்த ஜகத்தும் கல்பிதம் என்கிற மாத்யமிக பௌத்தமதத்தைக் கண்டிப்பதற்காக ஸூத்ரத்தை ஏன் செய்யவில்லை என்கிற சங்கையை நிராகரணம் செய்வதன் பொருட்டு—'ஶூன்யவாதி பக்ஷஸ்து' என்கிற முதலியபாஷ்யம் ப்ரவ்ருத்தமாயிருக்கிறது. சூன்யவாதிகளின் பக்ஷம் ஸர்வப்ரமாணங்களால் நிஷித்தமாயிருப்பதால் அத்யந்தஹேயமானது. ஸாதிப்பதற்கு அசக்யமாகையால் அந்த மதத்தை நிராகரணம் செய்வதற்காக ஸூத்ரத்தைச் செய்யவில்லை என்று சொல்லவே, ப்ரஹ்மவித்யா

---

* ஶூன்யவாதி பக்ஷஸ்து ஸர்வப்ரமாண விப்ரதிஷித்த இதி தன்னிராகரணாய நாதர: க்ரியதே (ப்ர. ஸூ. ஶா. பா. 2-2-39) ஶூன்யபதேன ஸர்வப்ரபஞ்சரஹிதம் பாவரூபம் கிஞ்சித்தத்வம் விவக்ஷிதம் உத அபாவரூபம்? நாத்ய:, ததா ஸதி வாசோ யுக்த்யந்தரேண ப்ரஹ்மவாத ஏவ ஆஶ்ரித: ।யதி த்விதீய: பக்ஷ:—ததா ஸர்வப்ரமாண விரோத:, ஸர்வப்ரமாணை: ப்ரபஞ்சே உபலப்யமானே ததபாவ ஏவ தத்வமிதி நிரூபயிதுமஶக்யமிதி தூஷணஸ்ய ஸ்புடதயா ந தன்னிராகரணாய ஸூத்ரக்ருதா ஸூத்ராண்யாரசிதானி; இதி (ப்ரஹ்ம வித்யாபரணம் 2-2-39.)

பரணகாரர் (அத்வைதாநந்தர் என்பவர்) பௌத்தர்களின் சூன் யம் பாவரூபமாகில்--பௌத்தர்களால் சொல்லப்படும் சூன்யமும் அத்வைதிகளால் சொல்லப்படும் ப்ரஹ்மமும் ஒன்றேயாய் சூன்ய வாதமும் ப்ரஹ்மவாதமும் ஒன்றேயாகிறது. சூன்யம் ப்ரஹ்மம் என்கிற ஶப்தமே வேராகும். ஆகையால் சூன்யம் பாவரூபம் என் கிற சூன்யவாதிகளின் மதம் ஸர்வப்ரமாணவிருத்தம் என்று சங்கராசார்யரின் அபிப்ராயமாகில் — நம்மிட அத்வைதமதம் ஸர்வப்ரமாண விருத்தமாகிறதாகையால் சங்கராசாரின்அபிப் ராயம் அவ்விதமானதென்று சொல்லக்கூடாது. பௌத்தர் களின் சூன்யம் பாவரூபமென்னில் அந்த சூன்யவாதமும் நம் முடைய ப்ரஹ்மவாதமு மொன்றேயாகையால், சூன்யம் பாவரூப மென்று சொல்லும் சூன்யவாதம் ஸ்வீகரிக்க அர்ஹமானதே. பௌத்தர்களந்த சூன்யம் ப்ரபஞ்சத்தின் அபாவரூபமென்று சொல்லுவார்களேயாயின்--ப்ரபஞ்சம் ப்ரமாணங்களினுல் காணப் பட்டுக் கொண்டிருக்க, ப்ரபஞ்சமே இல்லை, ப்ரபஞ்சாபாவமே தத்வமென்று சாதிப்பது அசக்யம் என்கிற தூஷணம் ஸ்பஷ் டமாக இருப்பதினுல் ஸூத்ரகாரர் இந்த துர்பல மான மதத்தை நிராகரணம் செய்ய ஸூத்ரங்களைச் செய்யவில்லை. ஆகையால் ஶூன்யம் ப்ரபஞ்சாபாவரூபம் என்று சொல்லும் ஶூன்யவாதி களின்மதம் துஷ்டமானது (ப்ரமாண விருத்தமானது) என்று சங்கராசார்யரிட பாஷ்யத்துக்கு தாத்பர்யம் என்று சொல்லி யிருக்கிறுர்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! பௌத்தர்களின் சூன்யம் பாவரூப மாகில் உம்முடைய ப்ரஹ்மமும் அந்த சூன்யமும் ஒன்றே. அந்த சூன்யவாதிகளின் மதமும் உம்முடைய மதமும் ஒன்றே என்று உங்கள் க்ரந்தகாரர்களின் அபிப்ராயமல்லவா?

பி. வா:—சூன்யம் பாவரூபமாகில் அத்வைதிகளின் ப்ரஹ்ம வாதமும் பௌத்தர்களின் சூன்யவாதமும் ஒன்றேயாகுமென்று ப்ரஹ்மவித்யாபரணகாரராகிய அத்வைதாநந்தருடைய அபிப்ரா யம்.

வா. வ:—இது எந்த க்ரந்தம்?

பி. வா:—இது எங்கள் மதுஸூதன ஸரஸ்வதி அவர்கள் செய்த அத்வைதஸித்தி என்கிற க்ரந்தம்.

வா. வ:—* இந்த வாக்யத்தின் தாத்பர்யம் சொல்லும்.

பி. வா:—ப்ரபஞ்சாபாவம் ஸத்யமா மித்யையா? என்று விகல்பம் செய்து, ப்ரபஞ்சாபாவம் ஸத்யமாகில் ப்ரஹ்மமொன்று ஸத்யம், ப்ரபஞ்சாபாவமொன்று ஸத்யமென்று இம்மாதிரி இரண்டு ஸத்யபதார்த்தங்கள் ஸித்திப்பதால், அத்வைதத்துக்கு ஹாநிவருகிறது. ப்ரபஞ்சாபாவம் மித்யையாகில் ப்ரபஞ்சம் ஸத்யமாக வேண்டி வருகிறதென்றுக்ஷேபணை வரவே, ப்ரபஞ்சாபாவம் ஸத்யமென்கிற பக்ஷத்தையே ஸ்வீகரிக்கிறோம். ப்ரபஞ்சாபாவம் ஸத்யமாகிலும் அத்வைதத்துக்கு ஹாநிவருவதில்லை. அந்த ப்ரபஞ்சாபாவம் ப்ரஹ்மஸ்வரூபம். (ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவரூபம்) என்று சொல்லுகிறோமென்று தாத்பர்யம்.

வா. வ:—ஶாஸ்த்ரிகளே! இந்த க்ரந்தம் எது?

பி. வா:—இது கண்டனகண்டகாத்யம் என்கிற க்ரந்தம்?

வா. வ:—"பாவே அபாவாதிரெக ஸ்வீகாராதேவ ந அத்வைத வ்யாகாத:" என்கிற வாக்யத்திற்கும், இதன் வ்யாக்யானமாகிய, "அஸ்மாபிரபி ப்ரஹ்மாதிரிக்தாபாவானங்கீகாரான் னத்வைதவ்யாகாத:" என்கிற இந்த வாக்யத்திற்கும் அபிப்ராயத்தைச் சொல்லும்.

பி. வா:—அபாவம் ப்ரஹ்மஸ்வரூபமே, பிரஹ்மத்தைக் காட்டிலும் வேறான அபாவத்தை நாங்களொத்துக் கொள்ளுவதில்லையாகையால் அபாவம் ஒன்று ஸத்யம், ப்ரஹ்மம் ஒன்று ஸத்யம் என்று சித்தித்து, அத்வைதம் கெட்டுப்போவதில்லை என்றபிப்ராயம்.

வா. வ:—ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவரூப மென்று கண்டனகண்டகாத்யகாரர் அத்வைதஸித்திகாரர் (அத்வைதிகள்) இவர்களுக்கு தாத்பர்யம்தானே?

---

* பாபஞ்ச நிஷேதாதிகரணீபூத ப்ரஹ்ம பின்னத்வாந் நிஷேதஸ்ய தாத்விகத்வேபி நாத்வைத ஹானிகரத்வம்,

பி. வா:—ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவரூபமென்றே தாத்பர்யம்.

வா. வ:—சூன்யம் பாவரூபமென்று சொல்லாத பௌத்தர்கள் அந்த சூன்யத்தை எந்தமாதிரியாகச் சொல்லுகிறார்கள்?

பி. வா:—சூன்யம் ப்ரபஞ்சாபாவரூபமென்று சொல்லுகிறார்கள். விசாரமென்ன. ஸ்பஷ்டமாக ப்ரஹ்மவித்யாபரணத்தில் "ஸர்வப்ரமாணை: ப்ரபஞ்சே உபலப்யமானே ததபாவ ஏவதத்வமிதி" இதுமுதலிய வாக்யங்களால் ப்ரபஞ்சாபாவரூபமே சூன்யம் என்கிற மதத்தை வைத்துக்கொண்டு கண்டித்திருக்கிறார்கள்.

வா. வ:—அத்வைதிகள் சூன்யத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் இதர:விஷயங்களில் ஸாம்யத்தை யொப்புக்கொண்டு, பாவரூபம் அபாவரூபம் என்கிற விசாரம் வந்து, சூன்யம் பாவரூபமென்று சொன்னால், அந்த சூன்யமும் அத்வைதிகளின் ப்ரஹ்மமும் ஒன்றே என்று கண்டத: சொன்னார்கள். சூன்யம் ப்ரபஞ்சாபாவரூபமென்று சொன்னாலும், அத்வைத ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவரூபமென்று அத்வைதிகளே ஒப்புக்கொண்டிருக்கையால் ப்ரபஞ்சாபாவரூபமான சூன்யத்திற்கும் ப்ரபஞ்சாபாவரூபமான ப்ரஹ்மத்திற்கும் பேதம் எந்த அம்ஸத்திலேயு மில்லாமையால் அத்வைதப்ரஹ்மமும் சூன்யமும் ஒன்றேயாய்விட்டதல்லவா?

பி. வா:—(உத்தரமில்லை.)

வா. வ:—தர்மராஜ ப்ரபுக்களே! அத்வைத மதத்தில் ப்ரஹ்மமொன்றே தத்வம். அந்த ப்ரஹ்மத்தில் ப்ராஹ்மணாதிவர்ணம் முதலான ஸமஸ்த ஜகத்தும் கல்பிதம் என்று சொல்லப்படுகிறது. பௌத்தமதத்தில் சூன்யமொன்றே தத்வம். அச் சூன்யத்தில் ஸமஸ்த ஜகத்தும் கல்பிதமென்று சொல்லப்படுகிறது. சூன்யம் நிர்விசேஷம் (ஸகல தர்மரஹிதம்) ஸத்யஞானாநந்தஸ்வரூபம் அஜ்ஞேயம், அவாச்யம். அத்வைதிகளின் ப்ரஹ்மமும் நிர்விசேஷம் (ஸகல தர்மரஹிதம்) ஸத்யஞானாநந்தஸ்வரூபம், அஜ்ஞேயம், அவாச்யம். சூன்யம் பாவரூபமானால், அத்வைதிகள் தங்கள் வாயினாலேயே பாவரூபமான சூன்யம் ப்ரஹ்மரூபமென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். சூன்யம் ப்ரபஞ்சாபாவ ரூபமானாலும்

ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவரூபமென்று சொல்லியிருப்பதால் அத்வைதிகளின் ப்ரஹ்மத்திற்கும் பௌத்தர்களின் சூன்யத்திற்கும் எவ்வித பேதமுமில்லை. ஜகத்து கல்பிதம் என்பதையோ அத்வைதிகளும் பௌத்தர்களு மொப்புக் கொண்டிருக்கிறார்கள். ஜகத்து வ்யாவஹாரிக ஸத்யம்என்பதை இருவரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்ற பிறகு எந்த விஷயத்தில் பௌத்தமதத்திற்கும், அத்வைத மதத்திற்கும் பேதமுண்டென்பதை தெறிவிப்பதற்கு மிஸ்டர் சர்மா அவர்களுக்கு உத்திரவு கொடுக்கவேணும். (சொல்லவேணும்).

கோர்ட்:—மிஸ்டர் சர்மா! எந்தெந்த விஷயங்களில் பேதமுண்டென்பதை தெரிவிக்க வேண்டியதென்று உம்முடைய கக்ஷிக்காரராகிய ஶாஸ்த்ரிகளுக்குச் சொல்லும்.

பி. வா:—அப்படியே, மஹாப்ரபோ!

பி. வ:—ஶாஸ்திரிகளே! அத்வைத மதத்திற்கும் பௌத்த மதத்திற்கும் எந்த விஷயத்தில் பேதமிருக்கிறதோ அதைச்சொல்லும்?

பி. வா:—அநேக விஷயங்களில் பேதமிருக்கிறது.

பி. வ:—ஒவ்வொரு விஷயமாகச் சொல்லும்.

பி. வா:—நாங்கள் (அத்வைதிகள்) வேதத்தை ப்ரமாணமென்று ஒப்புக்கொள்ளுகிறோம். வேதத்தில் சொல்லப்பட்ட யஞ்ஞம் முதலியவைகளை, ஸ்வர்க்கம் முதலிய பலத்தைக் கோரி செய்கிறோம். பௌத்தர்கள் வேதத்தை ப்ரமாணமாக ஒப்புக்கொள்ளுகிறதில்லை. வேதத்தில் சொல்லப்பட்ட யஞ்ஞாதிகளை ஸ்வர்க்கம் முதலியவைகளைக் கோரிசெய்வதில்லை. பௌத்தர்களுக்கும் அத்வைதிகளுக்கும் இவ்விஷயத்தில் விருத்தமான தர்மமுண்டு.

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

பி. வா:—எங்களிட சங்கரபகவத் பாதாசார்யருடைய ப்ருஹதாரண்யக பாஷ்யம். தவிர அதின் வ்யாக்யானமான ஆநந்தகிரிடீகா.

வா. வி:—* இந்த வாக்யங்களுக்கு அபிப்ராயத்தைச் சொல்லும்.

பி. வா:—பௌத்தரின் சிஷ்யர்கள் த்வைத ப்ரபஞ்சம் (ஸ்வர்க்காதிகள்) மித்யை என்று தெரிந்துக் கொண்டிருந்தாலும் எப்படி "ஸ்வர்ககாம: சைத்யம் வந்தேத" என்கிற இது முதலிய பரலோகம் முதலானவைகளை சொல்லும், தங்கள் ஶாஸ்த்ரத்திற்கு ப்ராமாண்யத்தை ஒப்புக் கொள்ளுகிறார்களோ அப்படியே அக்னி ஹோத்ராதி ஶாஸ்த்ரங்களுக்கும் ப்ராமாண்யம் பொருந்துகிற தென்று அபிப்ராயம்.

வா. வி:—இந்த வாக்யங்களால் பௌத்தர்கள் அத்வைதிகளைப்போலவே, ஸ்வர்க்கம் முதலான பரலோகங்களை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். மேலும் அந்த ஸ்வர்க்க லோகத்தையடைய ஸாதனங்களைச் செய்கிறார்கள் என்று ஸித்திக்கிறதா இல்லையா?

பி. வா:—ஸ்வர்க்கம் முதலிய லோகங்களை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவைகளை அடையும்பொருட்டு புண்ய கர்மங்களைச்செய்கிறார்கள் என்று ஸித்திக்கிறது.

வா. வி:—அத்வைதிகளைப் போலவே பௌத்தர்கள் ஸ்வர்க்கத்தின் கோரிக்கையால் புண்யகர்மங்களைச் செய்வதில்லை என்கிற பேதத்தை நீர் சொன்னது எப்படிப் பொருந்தும்?

பி வா:—(பதிலில்லை.)

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! வேதம் ப்ரமாணமென்றால் அர்த்தமென்ன?

---

* கிஞ்ச ந த்வைதவைதத்யம் ஶாஸ்த்ர ப்ராமாண்ய விகாதகம் யதோ பௌத்தாதிபி: ஶ்ரேயஸே ப்ரஸ்தாபிதா: ஸ்வஶிஷ்யா: த்வைதமித்யாத்வாவகமேபி 'ஸ்வர்ககாம: சைத்யம் வந்தேத' இத்யாதி ஶாஸ்த்ரஸ்ய ப்ராமாண்யம் க்ருஹ்ணந்தி ததாக்னிஹோத்ராதி ஶாஸ்த்ரஸ்யாபி ப்ராமாண்யம் பவிஷ்யதி ஸாதனத்வ ஶக்த்யனப ஹாராதித்யாஹ—நாபீதி (ஆனந்தகிரீயம்)

நாபி பாஷண்டிபிரபி ப்ரஸ்தாபிதா: ஶாஸ்த்ரஸ்ய ப்ராமாண்யம் ந க்ருஹ்ணீயு: (ப்ரு. ஶா. பா. 5-1.)

பி. வா:—ஆசார்யரே! இது என்ன பெரிய விஷயமாகக் கேழ்க்கிறீர்?

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! பெரியதோ சிறியதோ சொல்லும்?

பி. வா:—ப்ரமாணமென்கிற ஶப்தத்தில் ப்ர. மா. ல்யுட் (அன) என்று மூன்று பாகங்களுண்டு. ப்ர என்றால் ஸத்யமான வஸ்துவை தெரியப்படுத்தும் மா என்றால் ஞானத்தை, ல்யுட் (அன,) என்றால் உண்டுபண்ணுவது என்று அர்த்தமிருப்பதினால் வேதம் ப்ரமாணமென்றால் ஸத்யமான வஸ்துவை அறிவிக்கும் ஞானத்தை உண்டுபண்ணுவது. (வேதத்தினால் பிறந்த அறிவினால் தெரியவரும் [ஞானத்தில் விஷயமாகும்] வஸ்து ஸத்யம் என்றர்த்தம்.)

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! இந்த க்ரந்தங்கள் யார் செய்தது, எவை?

பி. வா:—நம்மபேய தீக்ஷிதர்கள் செய்த சித்தாந்த லேஶ ஸங்க்ரகம் என்கிற க்ரந்தம். தவிர அதற்கு க்ருஷ்ணாலங்கார மென்கிற வ்யாக்யானம்.

வா. வி:—இந்த க்ரந்தங்களை ப்ரமாணங்களென்று நீங்கள் (அத்வைதிகள்) ஒப்புக் கொண்டிருக்கிறீர்களல்லவா?

பி. வா:—அபேய தீக்ஷிதர்கள் பெரியோர்கள். அவர்களுடைய க்ரந்தங்களை, ப்ரமாணங்களென்று ஒப்புக்கொண்டிருக்கிறோம். அவர்களும் ஸ்வயமாக தம்மிட அபிப்ராயத்தைச் சொல்லவில்லை. பூர்வீகர்களான ஆசார்யர்களின் ஸித்தாந்தங்களை ஸங்க்ரகம்செய்து சொல்லி இருக்கிறார். அதுபற்றியே ஸித்தாந்தலேஶ ஸங்க்ரஹமென்று பெயர் வழங்கியது.

வா. வி:—* இந்த வாக்யங்களுக்கு தாத்பர்யத்தைச் சொல்லும்.

---

* ஜ்யோதிஷ்டோமாதி ஶ்ருதிபோதி தானுஷ்டானாத் பலஸித்தி:ஸ்வாப்ன ஶ்ருதிபோதி தானுஷ்டான ப்ரயுக்த பலஸம்வாத துல்யா ஸ்வப்னே ஹி கஶ்சித் கதாசித் ஜ்யோதிஷ்டோமாதி ஶ்ருதிம் கல்பயித்வாதத: ஸாதன

பி. வா:—ஸ்வப்னத்தில் ஒரு மனிதன் ஒரு ஸமயத்தில் 'ஜ்யோதிஷ்டமேன ஸ்வர்க்க காமோயஜேத' என்கிற ஃச்ருதியை கல்பித்துக்கொண்டு அந்த ஃச்ருதியில் ஸாதன விஶேஷத்தை யறிந்து, அந்த ஸாதனத்தை யனுஷ்டானம் செய்து ஸ்வர்க்காதி பலன்களை அடைவதெப்படியோ, ஜாக்ரத்தசையிலும் 'ஜ்யோதிஷ்டோமேன' என்கிற ஃச்ருதியை கல்பித்துக்கொண்டு, ஸாதனத்தை அனுஷ்டானம் செய்து, ஸ்வர்க்கம் முதலிய பலன்களை யடைவதும் அத்தகையதே. வாஸ்தவமாக விசாரம் செய்யுமளவில் ஃச்ருதியினுலேற்படும் ஆகாயம் முதலிய பதார்த்தங்களின் ஸ்ருஷ்டியும் முயல்கொம்புபோல் எப்படி அஸத்யமோ அப்படியே ஃச்ருதியினுல்தோன்றும் ஸ்வர்க்காதி பலன்களைக் கல்பிக்குமவர்கள் எவர்களுமில்லையாகையால் அவைகள் அஸத்யங்களென்றபிப்ராயம்.

வா. வி:—ஶாஸ்திரிகளே! இக்கிரந்தங்களெவை சொல்லும்?

பி. வா:—நம்பிட கௌடபாதாசார்யர்கள் செய்த மாண்டூகோபநிஷத் காரிகை, தவிர அதற்கு சங்கராசார்யர் செய்த பாஷ்யம்.

வா. வி:—இந்தக்ரந்தங்கள் உங்களுக்கு மான்யங்கள்தானே?

பி. வா:—ரொம்பவும் மான்யங்களே.

வா. வி:—இந்த ஃலோகத்திற்கும் அதற்கு சங்கராசார்யர் செய்த வ்யாக்யானத்திற்கு மபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—* ஸ்வாப்ன பதார்த்தங்கள் எப்படி அஸத்தோ—பொய்யோ, மாயாகல்பிதமான பதார்த்தம் எப்படி அபத்தமோ, வீடு கடை ஜனங்கள் இவைகளுடன் கூடிய கந்தர்வ நகரம் (ஆகா

---

விஶேஷமுபலப்ய ததனுஷ்டானுத் பலம் லபதே, தத்துல்யம் ஜாகரணேபி ஸ்வர்க்காதி பலலம்பனமித்யர்த்த: வஸ்துதஸ்து—ஶ்ருதிமாத்ர ப்ரதீத வியதாதி ஸர்க தத்க்ரமாதேரிவ ஶ்ருதிமாத்ர ப்ரதீத ஸ்வர்க்காதி பலஸ்யாப்யஸத்வமேவாபிப்ரேதம் கல்பகாபாவஸ்ய துல்யத்வாதிதி போத்யம்.

*. ஸ்வப்னமாயே யதா த்ருஷ்டே கந்தர்வ நகரம் யதா। ததா விஶ்வமிதம் த்ருஷ்டம் வேதாந்தேஷு விசக்ஷணை: (31) ந நிரோதோ ந சோத்பத்திர்ந

யத்திலுள்ள மேகம் முதலியவைகளில் தோன்றும் பதார்த்தம்) எப்படியபத்தமோ, ஸத்யம்போல் காணப்படுகிறதோ, அப்படியே இந்த ஸமஸ்த ஜகத்தும் அஸத்து = பொய். ஜகத்து அபத்தமாகையாலுத்பத்தி இல்லை, நாசமில்லை, ஸம்ஸாரியாகும் ஜீவனில்லை. மோக்ஷஸாதனங்களைச் செய்யும் ஜீவனில்லை, மோக்ஷத்தை இச்சிக்கும் புருஷனில்லை, முக்தனான புருஷனில்லை, ஸமஸ்த ஜகத்தும் முயற்கொம்பு, கந்தர்வநகரம் முதலிய பதார்த்தங்களைப்போலவே அஸத்யமென்று தாத்பர்யம்.

வா. வி:—"யதா மாயா யதா ஸ்வப்நோ கந்தர்வநகரம் யதா। ததோத்பாதஸ்ததா ஸ்தாநம் ததாபங்க உதாஹ்ருத:" என்கிற இந்த ஶ்லோகம் எந்த க்ரந்தத்திலிருக்கிறது?

பி. வா:—மாத்யமிகவ்ருத்தி என்கிற பௌத்த க்ரந்தத்திலுள்ளது.

வா. வி:—இதற்கர்த்தமென்ன?

பி. வா:—மாயிக பதார்த்தங்கள் எப்படி அஸத்யங்களோ, ஸ்வப்னம் எப்படி அஸத்யமோ, கந்தர்வநகர மெப்படி அஸத்யமோ, அப்படியே உத்பத்தி ஸ்திதி முதலியதுகள் அஸத்யம் என்றர்த்தம்.

வா. வி:—'ஸ்வப்ன மாயே யதா த்ருஷ்டே' என்கிற ஶ்லோகத்தினால் கௌடபாதாசார்யரவர்களும், அப்படியே அதின் வ்யா

---

பத்தோ நச ஸாதக: ந முமுக்ஷுர்ந வை முக்த இத்யேஷா பரமார்த்தத: (32) [காரிகா]

ஸ்வப்னஶ்ச மாயாச ஸ்வப்னமாயே அஸத்வஸ்த்வாத்மிகே. ஸத்வஸ்த்வாத்மிகே இவ லக்ஷ்யேதே அவிவேகிபி:। யதா ச ப்ரஸாரித பண்யாபண க்ருஹப்ராஸாத ஸ்த்ரீபும்ஜனபத வ்யவஹாரா கீர்ணமிவ கந்தர்வநகரம் த்ருஶ்யமான மேவ ஸத் அகஸ்மாத் அபாவதாம் கதம் த்ருஷ்டம் யதா ச ஸ்வப்ன மாயே த்ருஷ்டே அஸத்ரூபே ததா விஶ்வமிதம் த்வைதம் ஸமஸ்தம் அஸத் த்ருஷ்டம் ந நிரோத: ப்ரளய: உத்பத்தி: ஜனனம் பத்த: ஸம்ஸாரீ ஜீவ: ஸாதக: ஸாதனவான் மோக்ஷஸ்ய முமுக்ஷு: மோசனார்த்தீ முக்த: விமுக்த பந்த: உத்பத்தி ப்ரளயயோரபாவாத் பத்தாதயோ ந ஸந்தீத்யேஷா பரமார்த்ததா த்வைதஸ்யாஸத்வாத். (ஶாங்கரபாஷ்யம்).

க்யானத்தில் சங்கராசார்யரும், பௌத்தர்கள் போலவே உத்பத்தி முதலிய ஜகத்து அஸத்யமென்று சொல்லியிருக்கிறார்களல்லவா?

பி. வா:—ஆம் ஐயா! உத்பத்தி முதலிய ஜகத்து அஸத்யமென்று சொல்லியிருக்கிறார்கள்.

வா. வி:—இந்த வாக்யங்கள் யாரால் சொல்லப்பட்டது?

பி. வா:—நம்முடைய சங்கராசார்யரால் சொல்லப்பட்டது.

வா. வி:—இவைகளின் அபிப்ராயத்தைச் சொல்லும்.

பி. வா:—* புண்யமில்லை, பாவமில்லை, மந்த்ரமில்லை, ஜாதிபேதமில்லை, தாயில்லை, தந்தையில்லை, தேவதைகளில்லை, ஸ்வர்க்கம் முதலிய பரலோகங்களில்லை, பூலோகமில்லை, வேதமில்லை, யஞ்ஞமில்லை, கங்கை முதலிய தீர்த்தமில்லை, ப்ராஹ்மணாதி வர்ணங்களில்லை, ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஶ்ரமங்களில்லை, ஶாஸ்த்ரமில்லை, ஶாஸ்தா இல்லை, குருவில்லை, சிஷ்யனில்லை, சிக்ஷையில்லை, நீ இல்லை, நானில்லை, ஸாங்க்யமதமில்லை, ஶைவமதமில்லை, பஞ்சராத்ரமில்லை, பாஶுபதமில்லை, ஸௌரமதமில்லை, காணாபத்யமதமில்லை, ஶாக்தமதமில்லை, மீமாம்ஸகம் முதலிய மதங்களில்லை, அதிகம் சொல்லவேண்டியதெதற்கு-எல்லாஜகத்தும் முன்பில்லை, இப்போதில்லை, எதிர்காலத்திலுமில்லை (அபத்தம்) எது தோன்றுகிறதோ அது ப்ரமத்தால் தோன்றுகிறதாகையால் ஸர்வகர்மங்களையும் விடவேணும், கர்மங்களுக்கு ஸாதனங்களான யஞ்ஞோபவீதம் முதலியவைகளையும் விடவேணுமென்றபிப்ராயம்.

---

* நபுண்யம் ந பாபம் ந ஸௌக்யம் ந துக்கம் ந மந்த்ரோ ந தீர்த்தம் ந வேதா ந யஞ்ஞா: (4) நமே ஜாதிபேத: (நிர்வாணஷட்கம் 5.)

ந மாதா பிதாவா ந தேவா நலோகா ந வேதா நயஞ்ஞா நதீர்த்தம் ப்ருவந்தி(3)ந வர்ணா ந வர்ணாஶ்ரமாசாரதர்மா(2)ந ஶாஸ்தா நஶாஸ்த்ரம் ந ஶிஷ்யோ ந ஶிக்ஷா நசத்வம் ந சாஹம் ந சாயம்ப்ரபஞ்ச: (7) ந ஸாங்க்யம் ந ஶைவம் ந தத்பாஞ்சராத்ரம் ந ஜைனம் ந மீமாம்ஸகாதேர்மதம் வா (4) [தஶஶ்லோகீ]

தஸ்மாதவித்யா கார்யத்வாத் ஸர்வகர்மணாம் தத்ஸாதனானாம் ச யஞ்ஞோபவீதாதீனாம் பரமார்த்த தர்ஶன நிஷ்டேன த்யாக: கர்தவ்ய: (உபதேஶ ஸஹஸ்ரீ. 44.)

வா: வி:—ஶாஸ்த்ரிகளே! யஞ்ஞம் பொய், உபாஸனை பொய் செய்வது பொய், செய்பவன் பொய், அந்தஃகரணம் பொய், ஶுத்திபொய், ஶாஸ்த்ரம் பொய், உங்களிட வேதம் பொய், நீங்கள் ஒத்துக்கொள்ளும் நிற்குணப்ரஹ்மம் பொய், அந்த ப்ரஹ்மத்தைப்ரதிபாதிப்பது பொய் ஆகையால் *மலடிமகன் கானலில் (மருமரீசிகையில் = மணற்பூமியில் வெய்யிலில் தோன்றும் ஜலத்தைப் போன்ற பதார்த்தத்தில்) ஸ்நானம் செய்து, ஆகாய புஷ்பத்தினால் அலங்கரிக்கப்பட்டு முயற்கொம்பினால் செய்யப்பட்ட தனுஸ்ஸை தரித்துக்கொண்டு வந்துக்கொண்டிருக்கிறான் என்று சொல்லியவாறு—மலடிமகனின் வார்த்தைகளைப் போன்ற பொய்யான வேதத்தில் சொல்லப்படும் பொய்யான யஞ்ஞாதிகளினாலும் மற்றும் பொய்யான உபாஸனைகளினாலும், பொய்யான மனிதனின் பொய்யான மனஸ்ஸின் பொய்யான ஶுத்தியை அடைந்த பிறகு, பொய்யான வேதாந்த ஶாஸ்த்ரங்கள் பொய்யான நிற்குணப்ராஹ்மத்தின் பொய்யான ஞானத்தைப் பிறப்பிக்கிறதினால், பொய்யான வேதங்களுக்கு பொய்யான ப்ராமாண்யமுண்டென்று தாங்கள் சொல்லுவது அஸம்பவம். இப்படிச் சொல்லுவதினால் வேதம் ப்ரமாணமாகிறதில்லை.

பி. வா:—ஆசார்யரே! நம்மிட அத்வைதமத ப்ரக்ரியா உமக்கு தெரிந்திருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. யஞ்ஞாதிகள் வ்யாவஹாரிக ஸத்யமானவைகள். அத்தகைய வ்யாவஹாரிக ஸத்யங்களான யஞ்ஞாதிகளைப் போதிக்கும் வேதங்கள் வ்யாவஹாரிக ப்ரமாணங்களாய்க் கொண்டிருக்க, வேதம் நம்மிட மதத்தின்படிக்கு அப்ரமாணமென்று சொல்லுவது சரியல்ல.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்த சாஸ்திரிகள்-ஸத்யம் வ்யாவஹாரிகம் பாரமார்த்திகம் என்று இருவகைகளுண்டென்றும்,வேதம் வ்யாவஹாரிக ஸத்யமான யஞ்ஞாதிகளைப் போதிக்கிறதென்றும் அடிக்கடிச் சொல்லுவது சரியல்ல. ஏனெ

---

* ம்ருகத்ருஷ்ணாம்பவி ஸ்நாத: கபுஷ்பக்ருதஶேகர:। ஏஷ வந்த்யாஸுதோ யாதி ஶஶஶ்ருங்க தனுர்தர:॥

ணில்:—ப்ரமாணங்கள் தங்கள் தங்கள் விஷயங்களை பாரமார்த்திக ஸத்யமென்றே விஷயீகரிக்கின்றனவே யொழிய வ்யாவஹாரிக ஸத்யமென்று விஷயீகரிக்கிறதில்லை என்று பாமதீகாரர் முதலிய அத்வைதிகளே ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்ரமாண மென்பதற்கே வ்யாவஹாரிக ப்ரமாணமென்று அத்வைதிகளின் பரிபாஷையாக இருப்பதினால், வ்யாவஹாரிக ப்ரமாணமெனினும் அப்ரமாணமென்றே அர்த்தமென்று முன்பே கோர்ட்டில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 'வ்யவஹாரஸ்ய ப்ரமேயம் வித்யாவித்யேதி பேதபரிபாஷா। நாஸ்த்யேவ' என்று சங்கராசார்யரும் ஸ்வாத்ம நிரூபண மென்கிற க்ரந்தத்தில் 97-வது ஶ்லோகத்தில் சொல்லியிருக்கிறார். ஆகையால் இனிமேல் வ்யாவஹாரிகமென்று ப்ரதிவாதிகள் சொல்லக்கூடாதென்று கோர்ட்டார் உத்திரவுசெய்ய வேணுமாய்க் கோருகிறோம்.

கோர்ட்:—மிஸ்டர் சர்மா! வ்யாவஹாரிக ஸத்யத்தின் விசாரம் முதலிலேயே நடந்திருக்கிறது: (Resjudicata) மறுபடியும் அவ்விஷயத்தை ப்ரஸ்தாபிக்கக்கூடாதென்று ஶாஸ்த்ரியாருக்குச் சொல்லுங்கள்.

பி. வ:—ஶாஸ்த்ரிகளே! வ்யாவஹாரிக விசாரம் வேண்டாம், வேறு விசாரம் நடக்கட்டும்.

பி. வா:—ஆசார்யரே! நம்மிட நிர்குணப்ரஹ்மம் பொய் (அப்ராமாணிகப்) என்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்?

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! இது எந்த கிரந்தம்?

பி. வா:—இது நம் அத்வைத ஸித்தி என்கிற க்ரந்தம்.

வா. வி:—இது உமக்கு மான்யமே (ப்ரமாணமே) அல்லவா?

பி. வா:—மான்யமே (ப்ரமாணமே).

வா. வி:—* இவ்வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லும்.

---

* ஶுத்தம் ஹி ந த்ருஶ்யம்......கிந்துபஹிதமேவ தச்ச மித்யைவ ந ஹி வ்ருத்திதஶாயாமனுபஹிதம் பவதி......நசைவம் ஸதி ஶுத்த வித்திர் நஸ்யாதிதி வாச்யம் ஸ்வத ஏவ தஸ்ய ப்ரகாஶத்வேன ஸித்தத்வாதிதி.

பி. வா:—சுத்தமான நிர்குணப்ரஹ்மம் வேதாதி ஜன்யஞ் ஞான விஷயமல்ல. விஶிஷ்டமான மித்யா பூதமான ப்ரஹ்மமே ஞானத்திற்கு விஷயமானது. ஞானமிருக்கும்போது (வ்ருத்தி தஶாயாம்) ப்ரஹ்மம் அநுபஹிதம் (ஶுத்தம்) எப்படியாகும்? 'வேதத்தினுலுண்டான ஞானத்திற்கு விஷயமாகாவிடின் ப்ரஹ்ம மெப்படி ஸித்தமாகும்' என்று ஶங்கிக்கக்கூடாது. அது ஸ்வ ப்ரகாஶமாகையால் ஸித்திக்கிறதென்று அர்த்தம்.

வா. வி:—சுத்தமான ப்ரஹ்மம் வேதாதி ப்ரமாணங்களினுல் தெரிவிக்கப்படுகிறதா? இல்லையா?

பி. வா:—வேதாதி ப்ரமாணங்களினுல் தெரிவிக்கப்படுகிற தில்லை.

வா. வி:—ஶஶவிஷாணம் (முயற்கொம்பு) மலடிமகன் இவைகள் உண்டோ இல்லையோ? (ஸத்தா, அஸத்தா?)

பி. வா:—இல்லை. (அஸத்).

வா. வி:—ஏன் இல்லை?

பி. வா:—'மானுதீனு மேயஸித்தி:' ப்ரமாணமிருந்தால்தான் ப்ரமேயம் (பதார்த்தம்) சித்திக்கும். முயற்கொம்பு, மலடிமகன் இவைகள் உண்டென்று ப்ரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் இப்ர மாணங்களில் எதுவும் சொல்லாததினுல் அவைகள் இல்லை (அஸத்) என்றே சொல்லவேண்டும்.

வா. வி:—அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மம் ப்ரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் இப்ரமாணங்களில் யாதொன்றுலும் சித் திக்காமற்போனபின், ஶஶவிஷாணத்தைப்போலவே அதுவும் அஸத்தேயாகிறதல்லா?

பி. வா:—நம்மிட ப்ரஹ்மம் ப்ரமாணங்களினுல் சித்திக்கா மற்போயினும், அது ஸ்வப்ரகாஶமாகையால் ஸத்யமானது. ஶஶவிஷாணம் ஸ்வப்ரகாஶமல்ல, ப்ரமாணங்களினுல் அறியப் படுவதல்லாததினுல் அது அஸத்யம்.

வா. வி:—ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமென்கிற விஷயத்தில் ப்ரமாணமுண்டோ? (ப்ரமாணங்களினுல் ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶ மென்று தெரியவருமோ?)

பி. வா:—ப்ரமாணங்களினுல் ப்ரஹ்மம் ஸ்வ ப்ரகாஶ மென்று ஞாதமாயின் மருபடியும் அது உபஹிதப்ரஹ்மமே (அசுத்தப்ரஹ்மமே) ஆகிறது. ஆகையால் ப்ரஹ்மம் ஸ்வப்ர காஶமென்கிற விஷயத்தில் ப்ரமாணமில்லை.

வா. வி:—ப்ரமாணமில்லாமல் ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமாகுமா யின் ப்ரமாணமில்லாத ஶஶவிஷாணமும் ஸவப்ரகாஶமென்று ஏன் சொல்லக்கூடாது?

பி. வா:—(பதிலில்லை.)

வா. வி:—ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமென்று ஒத்துக்கொண்ட போதிலும், ஸ்வப்ரகாஶமென்பதற்கு என்ன அர்த்தம்?

பி. வா:—இதரப்ரமாணங்களினுல் அறிவதற்கு யோக்யமல்ல (இதராவேத்யம்) என்று அர்த்தம்,

வா. வி:—ஶஶவிஷாணம் இதரப்ரமாணங்களினுல் அறிவ தற்கு யோக்யமா அல்லது அயோக்யமா?

பி. வா:—ஶஶவிஷாணம் இதரப்ரமாணங்களினுல் அறிவ தற்கு அயோக்யமே. மேலென்ன?

வா. வி:—உங்களிட ப்ரஹ்மத்தைப்போலவே ஶஶவிஷாண மும் இதராவேத்யம் (ப்ரமாணங்களினுல் அறிவதற்கு அயோக் யம்) என்று சொன்னபிறகு, ஶஶவிஷாணமும் ஸ்வப்ரகாஶ மானதேயல்லவா?

பி. வா:—(பதிலில்லை.)

வா. வி:—உங்களிட அத்வைத ப்ரஹ்மமிருக்கிறதென்கிற விஷயத்தில் ப்ரமாணங்களில்லை. ஶூன்யமிருக்கிறதென்கிற விஷயத்திலும் ப்ரமாணங்களில்லை. ப்ரஹ்மமும் ஸ்வப்ரகாஶம், ஶூன்யமும் ஸ்வப்ரகாஶம். இப்படியிருக்க—உங்களிட ப்ரஹ்மம்

ஸத்யமும், பௌத்தரின் ஶூன்யம் அஸத்யமுமென்பதற்குக் காரணமென்ன?

பி. வா:—(பதிலில்லை..)

வா. வி:—தர்மராஜப்ரபோ? ப்ரமாணமெனில்:—ஸத்யமான பதார்த்தங்களை அறிவிப்பதென்று அர்த்தம். அத்வைதமதத்தின் படிக்கு வேதத்தினால் ப்ரதிபாத்யமான (சொல்லிக்கொள்ளப் படும்) ஜகத்து பொய். அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மமும் ஶஶ விஷாணத்தைப்போலவே பொய்யானது. ‘துஷ்யது’ (ஸந்தோ ஷிக்கட்டும்) என்கிற ந்யாயத்தின்படிக்கு—ஸத்யமென்று வைத் துக்கொண்டபோதிலும்—அந்த அத்வைதப்ரஹ்மம் வேதத்தி னால் தெரியவருவதல்லாததினால், வேதம் ஸத்யமான எந்தபதார்த் தத்தையும் அறிவிக்காததினால் வேதம் பௌத்தர்களின் மதத் தைப்போலவே அத்வைதிகளின் மதத்திலும் அப்ரமாணமேயாகி றது, ப்ரமாணமாகிறதில்லை. (ஸத்யமானபதார்த்தத்தை அறிவிப் பதாகிறதில்லை.) ஆகையால் ‘பௌத்த மதத்திற்கும் அத்வைத மதத்திற்கும் வேதம் ப்ரமாணமென்கிற விஷயத்தில் பேதமுண்டு என்று ப்ரதிவாதிகள் சொல்லுவது யுக்தமல்ல’ என்கிற விஷ யத்தைக் கோர்ட்டார் கவனிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

## விஞ்ஞானவாதி பௌத்தாத்வைத மத ஸாம்ய விசாரணை.

கோர்ட்:—ஆசார்யரே! அத்வைதமதம் விஞ்ஞான வாதிக ளான பௌத்தர்களின் மதமே என்று நீரெப்படிச்சொல்லுகிறீர்?

வா. வி:—(To the Court.) தர்மராஜப்ரபோ! ஶூன்ய வாதமே பௌத்தர்களுக்கு ஸம்மதமான முக்யமதம். ஆனால் சில மூடரான சிடர்களுக்கு நிர்விஶேஷமான ஶூன்யமே தத்வம் எல்லா ஜகத்தும் அச்சூன்யத்தில் கல்பிதமென்று சொல்லின், திடீ ரென்று தம்மதத்தில் நம்பிக்கை யுண்டாக மாட்டாரதென்கிற அபிப்ராயத்தினால், ஶூன்யமும் விஞ்ஞானமும் ஒன்றேயா யினும், ஶூன்யமென்கிற பெயரைச்சொல்லாமல், விஞ்ஞானமே

தத்வம், வெளிப்ரபஞ்ச மெல்லாம் அந்த விஞ்ஞானத்தில் கல்பிதமென்று சொல்லிக்கொண்டே, ஶூன்யவாதத்திற்கும், விஞ்ஞானவாதத்திற்கும் கொஞ்சம் பேதத்தைக் காட்டியிருக்கிறார்களே யொழிய, விஞ்ஞானவாதம் ஶூன்யவாதம் இரண்டும் ஒரே மதமாகிறது. ஶூன்யவாதிமதமும் அத்வைதமதமும் ஒன்றேயானபின் விஞ்ஞானவாதி மதமும் அத்வைத மதமும் ஒன்றேயாகிறது. இரண்டுமதங்களின் தத்வங்களை துலனை (எடை) செய்தபோதிலும் ஒன்றேயாகின்றது.

கோர்ட்:—விஞ்ஞானவாதிகளுக்கும் ஶூன்யமொன்றே தத்வமென்பதிலேயே தாத்பர்யம். மூடரான சீடர்களுக்காக விஞ்ஞானமே தத்வமென்று சொல்லியிருக்கிறார்களென்பது உமக்கெப்படித் தெரிந்தது?

வா. வி:—* ஹீன (கனிஷ்ட) மத்யம உத்தமர்களென்று சீடர்கள் மூன்றுவிதங்களுளர். ஹீனரான சீடர்களுக்காக பாஹ்ய பதார்த்தங்களுக்கு ஸத்யவத்தைச் சொல்லிக்கொண்டே, க்ஷணிகத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. மத்யமர்களான சீடர்களுக்காக விஞ்ஞானமொன்றே தத்வம்,பாஹ்யபதார்த்தங்கள் பொய்யென்று சொல்லி, அவ்விருவருக்கும் ஶூன்யமொன்றே தத்வமென்கிற புத்தியை உண்டாக்குகிறார்கள். உத்தமர்களான சீடர்களுக்கு முதலிலேயே ஶூன்யமொன்றே தத்வம், எல்லாஜகத்தும் மித்யை என்று உபதேஶித்திருக்கிறார்களென்று போதிசித்த விவரணமென்கிற கிரந்தத்திலும், சங்கராசார்யரும், பாமதீகாரரும் சொல்லியிருப்பதினால் விஞ்ஞானவாதத்தை உபதேசிக்கும்பௌத்தர்களுக்கும் ஶூன்யமொன்றே தத்வமென்பதில் தாத்பர்யமென்று தெரியவருகிறது.

---

*தேஶனா லோகநாதானாம் ஸத்வாஶய வஶானுகா:। பித்யந்தே பஹுதா லோகே உபாயைர்பஹுபி: புன:। கம்பீரோத்தான பேதேன க்வசிச்சோபய லக்ஷணா। பின்னாஹி தேஶனா பின்னா ஶூன்யதாத்வயலக்ஷணா। (போதி சித்த விவரணம்.)

ஸ ச பஹுப்ரகார: விநேய பேதாத்வா (ப்ர. ஸூ. ஶா. பா. 2-2-18.)

கோர்ட்:—ஶாஸ்த்ரிகளே! இவ்வாசார்யர் விஞ்ஞானவாதிகளான பௌத்தர்களின் மதமும் அத்வைதமதமும் அவைகளின் தத்வங்களை துலனு (எடை) செய்தபோதிலும் ஒன்றேயாகிறதென்று சொல்லுகிறார். அது எப்படி என்கிறதை விசாரியுங்கள்.

பி. வா:—ஆசார்யரே! நம்மத்வைதமதமும், விஞ்ஞானவாதிகளான பௌத்தர்களின் மதமும் ஒன்றே என்பதற்கு ஆதாரமென்ன?

வா. வி:—கௌடபாதாசார்யர், சங்கராசார்யர் முதலியவர்களின் அத்வைத க்ரந்தங்களும், பௌத்த க்ரந்தங்களுமே ஆதாரங்கள்.

பி. வா:—அத்வைதிகளின் க்ரந்தங்களைச் சொல்லுங்கள்?

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

பி. வா:—இதில் (1) கௌடபாதர்செய்த மாண்டூகோபனிஷத்காரிகா, (2) அதின் சங்கரபாஷ்யம், (3) அதின் ஆனந்தகிரிடீகை என்கிற மூன்று க்ரந்தங்களிருக்கின்றன.

வா. வி:—* இவ்வாக்யங்களின் அபிப்ராயமென்ன?

---

ஹீனமத்யமோத்க்ருஷ்டதியோ ஹி ஶிஷ்யா பவந்தி। யே ஹீனமதய: தே ஸர்வாஸ்தித்வ வாதேன ததாஶயானுரோதாச்சூன்யதாயாமவதார்யந்தே। யேது மத்யமா: தே ஞானமாத்ராஸ்தித்வேன ஶூன்யதாயா மவதார்யந்தே। யேது ப்ரக்ருஷ்டமதய: ஸ்தேப்ய: ஸாக்ஷாதேவ ஶூன்யதத்வம் ப்ரதிபாத்யதே. (பாமதீ.)

*ஞானமாத்ரம் பாரமார்த்திகம். தத்ரைவ ஞாத்ருஞேயாதி கல்பிதமிதி ஸௌகதமதமேவ பவதாபி ஸங்க்ருஹீத மித்யாஶங்க்யாஹ— ஞானமிதி (ஆனந்தகிரீயம்)

ஞானம் நைதத்புத்தேன பாஷிதம். (கௌடபாதீயம்). ஞானஞேய ஞாத்ருபேத ரஹிதம் பரமார்த்த தத்வ மத்வயமேதன்ன புத்தேன பாஷிதம். யத்யபி பாஹ்யார்த்த நிராகரணம் ஞானமாத்ரகல்பனு சாத்வயவஸ்துஸாமீப்யமுக்தம்.இதம் து பரமார்த்த தத்வமத்வைதம் வேதாந்தேஷ்வேவ விஞ்ஞேயமித்யர்த்த: (சங்கரபாஷ்யம்.)

ஞானேதி ஸகலபேத விகலம் பரிபூர்ணமனுதிரிதஞம் ஞ்யப்திமாத்ரமுபனிஷதேக ஸமதிகம்யம் தத்வமிஹ ப்ரதிபாத்யதே, மதாந்தரே து நைவமிதி குதோ மதஸாங்கர்ய ஶங்காவகாஶ மாஸாதயேதித்யர்த்த: (ஆநந்தகிரீயம்)

பி. வா:—ஞானமொன்றே பரமார்த்தஸத்யமானது.; (நிஜமானஸத்யமானது). அந்த ஞானத்தில் ஞாத்ரு ஞேயம் முதலிய எல்லா ஜகத்தும் கல்பிதமென்கிற பௌத்தமதத்தையே நீங்கள் (கௌடபாதாசார்யர்) ஸங்க்ரஹித்திருக்கிறீர்கள் (அங்கீகரித்திருக்கிறீர்கள்) என்று அக்காலத்திலிருந்த பண்டிதர்கள் ஆக்ஷேபிக்கவே--கௌடபாதாசார்யர் 'ஞானம்நைதத் புத்தேனபாஷிதம்' என்று ஸமாதானம் சொன்னதற்கு, சங்கராசார்யர் வ்யாக்யானம் செய்திருக்கிறார். யத்யபி—ஞானமொன்றே ஸத்யம். அந்த ஞானத்தில் பாஹ்யமான ப்ராஹ்மணவர்ணம் முதலிய எல்லா ஜகத்தும் கல்பிதம் (பொய்) என்பதை பௌத்தர்களைப்போல் நாமும் அங்கீகரிக்கிறோம். ஆயினும்--ஞானஞேய ஞாத்ருபேத ரஹிதமான அத்வயமான (த்விதீயவஸ்து ரஹிதமான) பரமார்த்த தத்வம் புத்தனால் சொல்லப்படவில்லை. அத்வயமான இந்த பரமார்த்த தத்வத்தை வேதாந்தத்தினாலேயே தெரிந்துக்கொள்ள வேண்டும். ஆகையால் பௌத்தமதமும் அத்வைத மதமும் ஒன்றே என்று ஶங்கிப்பதற்கு அவகாச மெப்படி யுண்டாகிறதென்று அபிப்ராயம்.

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

பி. வா:—கௌடபாதாசார்யரின் காரிகைக்கு ஸ்வயம்ப்ரகாஶாநந்த ஸரஸ்வதிகளால் செய்யப்பட்ட மிதாக்ஷரா என்கிற வ்யாக்யானம்.

வா. வி:—'ஞானம் நைதத்புத்தேன பாஷிதம்' என்கிற காரிகா வ்யாக்யானத்திற்கு தாத்பர்யமென்ன?

பி. வா:—மேற்கூறப்பட்ட க்ரந்தங்களின் தாத்பர்யத்தைப் போலவே, பௌத்தமத ஸாம்யத்தை ஶங்கித்துக்கொண்டு பரிஹரிக்கிறது.

வா.வி: —இது எந்த க்ரந்தம்?

பி. வா:—கௌடபாதீய விவேகம்.

வா. வி:—'ஞானம்' என்கிற ஶ்லோகத்திற்கு வ்யாக்யானத்தின் அபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—எவ்வளவென்று கேட்க்கிறீர்கள்? இந்த க்ரந்தத்தின் அபிப்ராயமும் மேற்கூறியுள்ள க்ரந்தங்களின் அபிப்ராயத்தைப்போலவே (பௌத்தமதத்திற்கும் அத்வைத மதத்திற்குமுள்ள ஸாம்யஶங்கையை பரிகரிக்கிறது.)

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

பி. வா:—இது நம் வித்யாரண்யர் (மாதவாசார்யர்) செய்த சங்கரவிஜயம்.

வா. வி:—* இந்த ஶ்லோகங்களுக்கு அபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—சங்கராசார்யர் ஓர் தேவாலயத்தில் ப்ரவேசிக்கும்போது உமக்கு தேவாலயத்தில் ப்ரவேசிக்கும் எண்ணமிருக்குமாயின் பௌத்த மதத்திற்கும் உம்மிட மதத்திற்கும் என்ன பேதமிருக்கிறதோ அதைச் சொல்லி பிறகு ப்ரவேஶிக்க வேண்டியது என்று அங்கிருந்தவர்கள் சொல்லவே, விஞ்ஞானவாதிகள் விஞ்ஞானத்திற்கு க்ஷணிகத்வத்தையும், பஹுத்வத்தையும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். நாங்கள் விஞ்ஞானம் நித்யமென்றும் ஒன்றே என்றும் ஒப்புக்கொள்ளுகிறோமென்று விசேஷத்தைச் சொல்லியிருக்கிறார்கள்.

வா. வி:-சாஸ்த்ரிகளே! இது எந்த க்ரந்தம்? யார் செய்தது?

பி. வா:—ஸம்க்ஷேபஶாரீரக மென்கிற க்ரந்தம். ஸர்வஞ்ஞ முனிகளால் செய்யப்பட்டது. இந்த டீகை அத்வைதஸித்திகாரரான மதுஸூதன ஸரஸ்வதிகளால் செய்யப்பட்டது.

---

* விவிக்ஷுர்யதி தேவதாலயம்। விஞ்ஞான வாதஸ்ய ச கிம் விபேதகம் பவன்பதாத் ப்ரூஹி ததஃ பரம் வ்ரஜ। விஞ்ஞான வாதீ க்ஷணிகத்வமேஷாமங்கீசகாராபி பஹுத்வமேஷஃ। வேதாந்தவாதீ ஸ்திர ஸம்விதேகேத்யங்கீசகாரேதி மஹான்விவிஶேஷஃ।

வா. வி:—* இந்த ஸ்லோகங்களுக்கும், இதுகளின் வ்யாக்யானங்களுக்கும் அபிப்ராயத்தைச் சொல்லும்?

பி. வா:—பௌத்தர்களைப்போல் ஞானமொன்றே ஸத்யம், அந்த ஞானத்தில் ஆகாயம் முதலிய எல்லா ப்ரபஞ்சம் கல்பிதமானது. ஸ்வப்ன பதார்த்தத்தைப்போல் பொய்யானது என்று அத்வைதிகள் சொல்லுவதினால், அத்வைதமதம் பௌத்தமதத்திற்கு ஸமானமானதென்று சொல்லவே, அதற்குமேல்-விஞ்ஞானவாதிகள் வேதத்திற்கு ப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளமாட்டார்கள், அத்வைதிகள் வேதத்திற்கு ப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ளுகிறார்கள், ஆகையால் அத்வைதமதம் பௌத்தமதத்தோடு ஸமமானதென்று எப்படிச் சொல்லுகிறீர்கள்? என்று ஆக்ஷேபம் வரவே—வேதத்தினால் சொல்லப்படும் ஞானத்தைவிட வேறான பதார்த்தத்தை அத்வைதிகள் ஒப்புக்கொள்ளாத பிறகு-அத்வைதிகளும் வேதம் அப்ரமாணமென்று ஒப்புக்கொண்டாற்போலவே யாகிறது. ஆகையால் அத்வைதமதம் பௌத்தமதமே என்று ஏற்படுகிறதென்று அபிப்ராயம்.

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

பி. வா:—இது தத்வஸங்க்ரகமென்கிற பௌத்த க்ரந்தம்.

---

* நநு ஸர்வஸ்யாபி விததாதி ப்ரபஞ்சஸ்ய ஸ்வப்னதுல்யத்வே தத்விஞானாத்மகமேவ ஸர்வம் வக்தவ்யம். ததஸ்ச விஞ்ஞானவாதி ஸமய ப்ரவேசாபத்திரிதி சங்கதே.

நநு சாக்ய பிக்ஷு—ஸமயேன ஸம:
ப்ரதிபாத்யயம் ச பகவத் ஸமய:।
யதி பாஹ்யவஸ்து விததம் நு கதம்
ஸமயாவிமௌ ந ஸத்ருசௌ பவத: (2-25.)

நன்விதி। சாக்யௌ ஜினபௌத்தௌ விஞ்ஞானவாதீ தத்வித்தாந்தே நேத்யர்த்த: பகவதோ வ்யாஸ பகவத்பாதாதே: (சங்கராசார்யஸ்ய) ஸமய இத்யர்த்த:। நனு விஞ்ஞானவாதினா வேதப்ராமாண்யாத்யனப்யுபகமாத் கதம் ததப்யுபகந்த்ரு பகவத் ஸமயஸ்ய தத்ஸமய துல்யதேதி சேத் ஸத்யம், ததாபி விஞ்ஞானாதிரிக்த விஞ்ஞேயா நப்யுபகமே கதம் ந தத்தௌல்யம் தேனாபி ததைவாங்கீகாராதித்யாஹ—யதீதி, பாஹ்யம் விஞ்ஞானாதிரிக்தம் வஸ்து விததமலீகம் கதன்விதி ஸம்பந்த: வ்யதிரேகமுகேன உக்தமதத்வய ஸாம்யமன்வயேனாப்யாஹ—

யதி போத ஏவ பரமார்த்த வபுர்
நது போத்ய மித்யபிமதம் பவதி।
நநு சாஸ்ரிதம் பவதி புத்தமுனேர்
மதமேவ க்ருத்ஸ்னமிஹ மஸ்கரிபி: (2-26.)

வா. வி:—* இந்த ஸ்லோகங்களுக்கு அபிப்ராயமென்ன?

பி. வா:—ப்ருத்வீ முதலான எல்லா ஜகத்தும் நித்யமான ஞானரூப தத்வத்தில் கல்பிதமானது. அந்த ஞானரூபமே ஆத்மா என்று அத்வைதிகள் சொல்லுகிறார்கள். ஆகையால் அவர்களிட மதமும், நம்மிடமதமும் (பௌத்தமதமும்) ஒன்றேயாகையால் அத்வைதமதம் சரியானதே. ஆயினும் ஞானம் நித்யமென்று சொல்லுவதினால் அந்தமதம் கொஞ்சம் துஷ்டமானதென்று அபிப்ராயம்.

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

கோர்ட்:—ஆசார்யரே! இன்னும் எத்தனை க்ரந்தங்களைக் கேழ்ப்பீர்கள்? கோர்ட்டின் காலம் வீணாகிறது. முன் விசாரம் நடக்கட்டும்.

வா. வி:—தர்மராஜப்ரபோ! இது மிகவும் அவஸ்யமாகையால் கேழ்க்கிறோம். இன்னும் அநேக க்ரந்தங்கள் கேழ்க்கவேண்டிய ஆவஸ்யக மிருக்கின்றன. வேண்டாமென்று உத்திரவாயின் விட்டுவிடுகிறோம். ஆவஸ்யகமானபோது கேழ்ப்பதற்கு உத்திரவாகவேணும்?

கோர்ட்:—எஸ்.

வா. வி:—இந்த அத்வைதிகளின் க்ரந்தங்களினாலும், பௌத்தர்களின் க்ரந்தங்களினாலும் அத்வைதமத தத்வங்களும், பௌத்தமத தத்வங்களும் ஒன்றேயென்று ஸித்திக்கிறதல்லவா?

பி. வா:—ஆசார்யரே! அத்வைத க்ரந்தங்களுக்காகிலும், பௌத்த க்ரந்தங்களுக்காகிலும் அபிப்ராயம் உம்மிட மனதுக்கு கோசரமானதாகத் தோன்றவில்லை. சில பாகங்களில் தத்வங்களுக்கு ஐக்யம் சொல்லப்பட்டிருப்பினும், அந்த க்ரந்தங்களிலேயே வேறு சில பாகங்களில் அத்வைதமத தத்வங்களுக்கும், பௌத்தமத தத்வங்களுக்கும் பேதம் சொல்லியிருக்கிறார்கள்.

---

* நித்ய ஞான விவர்தோயம் க்ஷிதி தேஜோ ஜலாதிகஃ। ஆத்மா ததாத்மகஸ்சேதி ஸங்கிரந்தேபரே புனஃ ॥ 328 ॥......தேஷாமல்பாபராதம் து தர்ஸனம் நித்யதோக்திதஃ।

அதைத் தெரிந்துகொள்ளாமலே, அத்வைதமதமும் பௌத்த மதமும் ஒன்றேயென்று நீர் சொல்லுகிறீர்.

வா. வி:—சாஸ்த்ரிகளே! அத்வைத மதத்திற்கும், பௌத்த மதத்திற்கும் எத்தனையம்சங்களில் ஐக்யம் சொல்லப்பட்டிருக்கிறது? எத்தனையம்சங்களில் பேதம் சொல்லப்பட்டிருக்கிறது?

பி. வா:—ஞானமொன்றே பாரமார்த்திக ஸத்யமானது. அந்த ஞானத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதமானதென்பதை, பௌத்தரும் அத்வைதிகளும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆயினும் அந்த ஞானமென்கிற தத்வத்தை பௌத்தர்கள் க்ஷணிகமென்றும், ப்ரதிக்ஷணத்திலும் வெவ்வேறாய்க் கொண்டிருப்பதினால் அநேகங்களென்றும் சொல்லுகிறார்கள். அத்வைதிகள் அந்த ஞானம் (ப்ரஹ்மம்) ஒன்றே என்றும், நித்யமானதென்றும், வேதாந்தத்தினாலேயே அறிவதற்கு யோக்யமானதென்றும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். இந்த அம்சத்தில் பௌத்த மதத்திற்கும் அத்வைத மதத்திற்கும் பேதமுண்டென்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதினால் இவ்விரண்டு மதங்களும் ஒன்றே என்று எப்படிச் சொல்லுகிறீர்கள்? பௌத்த மதத்தினின்றும் அத்வைத மதத்திற்கு சில அம்சங்களில் மாத்ரம் ஸாம்யமிருந்த மாத்ரத்தினால் அவ்விரண்டு மதமும் ஒன்றேயாகுமாயின்—ஒவ்வொரு மதத்தின் சில தத்வங்கள் மற்றொரு மதத்தின் சில தத்வங்களுடன் ஸமமாகவே இருக்கும், அவ்வளவு மாத்ரத்தினாலேயே அவ்விரண்டு மதங்களும் ஒன்றேயாக வேண்டிவருமல்லவா?

வா. வி:—சாஸ்திரிகளே! அத்வைதிகளிடவும், பௌத்தர்களிடவும் விஞ்ஞான தத்வத்தில் நீங்கள் சொல்லியபடிக்கு பேதமிருந்த பக்ஷத்தில் அவ்விரண்டு மதங்களும் வெவ்வேறாகலாம். அவ்விதமான பேதமொன்றும் காணப்படவில்லை. தவிர அத்வைதிகள் சொல்லும் விஞ்ஞான ரூபமான ப்ரஹ்மத்தில் ப்ரமாணங்களுக்கு விஷயமாவதற்குக் காரணமில்லாததினால் அத்வைத ப்ரஹ்மம் எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாகாததினால் பௌத்தர்களின் விஞ்ஞானத்தைப் போலவும், ஶூன்யத்தைப் போலவும் அந்த ப்ரஹ்மம் வேதாந்தத்தினால் தெரியவருவதுமல்ல.

கோர்ட்:—மிஸ்டர் H.H. சர்மா! இவ்விஷயத்தை விசாரியும்?

பி. வ:—அப்படியே ப்ரபோ!

பி. வ:—ஆசார்யரே! ப்ரத்யக்ஷத்தினல் ப்ரஹ்மம் ஏன் காணப்படாது?

வா. வி:—ப்ரத்யக்ஷத்தினல் (சக்ஷுஸ் முதலிய இந்தரியங்களினல்) தெரியவேணுமாயின், அந்த பதார்த்தத்தில் ரூபம் (வர்ணம்) முதலியவை இருக்கவேண்டும். அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மத்தில் அவைகளில்லாததினல் ப்ரத்யக்ஷத்தினல் தெரியாது.

பி. வ:—அனுமானத்தினல் ஏன் தெரியக்கூடாது?

வா. வி:—'நைஷாதர்க்கேண மதிராபநேயா' என்கிற காடகம் முதலிய ஶ்ருதிகளில் ப்ரஹ்மம் தர்கத்திற்கு விஷயமல்லவென்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்றும் அனுமானம் — தர்மத்தையுடைய பதார்த்தங்களையே தெரிவிக்கின்றன. அத்வைதிகள் ப்ரஹ்மத்தில் எந்த தர்மமும் அங்கீகரிப்பதில்லாததினல் அத்வைதிகளால் சொல்லப்படும் ப்ரஹ்மம் அனுமானத்திற்கு விஷயமல்ல.

பி. வ:—வேதம் முதலிய ஶப்த ப்ரமாணங்களினல் ப்ரஹ்மம் ஏன் தெரியக்கூடாது?

வா. வி:—ஶப்தத்தினல் தோன்றுவது—ஒரே பதத்தினல் தோன்றுவதென்றும், அநேக பதங்களினல் (வாக்யத்தினல்) தோன்றுவதென்றும், இரண்டு விதங்களாயிருக்கிறது. ஒரே பதத்தினல் தோன்றுவது—ரூட சக்தியினலென்றும், யோக சக்தியினலென்றும் இரண்டு விதங்களுண்டு. உதாஹரணம்:—கடம் (குடம்) கடமென்கிற ஒரே பதத்தினல் தோன்றுகிறது. பங்கஜமென்கிற யௌகிகபதம் தன்னிடத்திலிருக்கும் பங்க ஜனி ட என்கிற அவயவங்களின் அர்த்தத்தினல் ஸம்பத்தமான 'பங்கஜனிகர்த்ரு' சேற்றில் பிறந்தது (தாமரை) என்கிற அர்த்தத்தைத் தெரிவிக்கிறது. 'வஜ்ரம் ஹஸ்தே தத்தே' என்கிற வாக்யம் தன்னிடத்தில் கடகமான (சேர்ந்த) வஜ்ர ஶப்தம் இரண்டாவது வேற்றுமை, ஹஸ்த ஶப்தம் ஏழாவது வேற்றுமை டுதாஞ்தாது, திங்

ப்ரத்யயம் இவைகளின் அர்த்தங்களினுல் ஸம்பத்தமான—கையில் வஜ்ரத்தை தரித்திருக்கும் இந்த்ரனைத் தெரிவிக்கிறது. ப்ரக்ருதம் அத்வைதிகள் சொல்லும் ப்ரஹ்மம் வேதத்திலிருக்கும் ரூடபதத்தினுலாகிலும், யௌகிக பதத்தினுலாகிலும், வாக்யத்தினுலாகிலும் அறிவதற்கு ஶக்யமல்ல.

பி. வ:—ப்ரஹ்மம் ரூட பதத்தினுல் ஏன் அறியப்படாது?

வா. வி:—தாங்கள் சொல்லும் இங்கிலீஷ் ஶப்தத்தினுல் நம்மைப்போன்ற வைதிகர்களுக்கு அர்த்தஞானமாகுமா?

பி. வா:—ஶப்தத்தினுல் அர்த்த ஞானம் ஆக வேண்டின் பூர்வம் இந்த ஶப்தம் இவ்விதமான அர்த்தத்தைப் போதிக்கிறதென்கிற ஞானம் (வ்யுத்பத்தி) இருக்க வேண்டும். இந்த இங்கிலீஷ் ஶப்தம் இந்த அர்த்தத்தைத் தெரிவிக்கிறது (இந்த அர்த்தம் இந்த இங்கிலீஷ் ஶப்தத்தினுல் சொல்லப்படுகிறது) என்கிற ஞானம் இல்லாததினுல், இங்கிலீஷ் ஶப்தத்தினுல் அர்த்த ஞானம் நமக்கு உண்டாகிறதில்லை.

வா. வி:—இந்த பதம் இவ்விதமான அர்த்தத்தைச் சொல்லுகிறது. (இந்த அர்த்தம் இப்பதத்தினுல் சொல்லப்படுகிறது) என்கிற ஞானமுண்டாக வேண்டின்—பூர்வத்தில் அந்த அர்த்தத்தின் ஞானமிருக்க வேண்டுமல்லவா?

பி. வா:—வேண்டும். பூர்வத்தில் கடம் (குடம்) ப்ரத்யக்ஷத்தினுல் பார்க்கப்பட்டிருந்தால்தான் இக்குடம் கடமென்கிற ஶப்தத்தினுல் சொல்லப்படுகிறதென்று பெரியோர்கள் சொல்லும் வார்த்தைகளினுல் தெரிந்துகொண்டிருக்கும் மனிதனுக்கு, கடத்தைக் கொண்டுவரச்சொன்னுல், அந்த கடமென்கிற ஶப்தத்தினுல் குடத்தின் ஞானம் உண்டாகிறது. இப்படி எந்த ஶப்தத்தினுலாவது ஒரு பதார்த்தத்தின் ஞானம் ரூடியினுல் உண்டாக வேண்டின் அந்த பதார்த்தத்தின் ஞானம் பூர்வத்திலிருக்க வேண்டும்.

வா. வி:—ப்ரஹ்மத்தின் ஞானம் ரூட ஶப்தத்தினுல் ஆக வேண்டியிருப்பின்--பூர்வம் ப்ரஹ்மத்தின் ஞானம் இருக்கவேண்டுமல்லவா?

பி. வா:—ஆம்; பூர்வம் ப்ரஹ்மத்தின் ஞானம் இருக்க வேண்டும்.

வா. வி:—ப்ரஹ்ம ஞானம் பூர்வத்தில் எதினுலுண்டாகிறது?

பி. வா:—ப்ரத்யக்ஷத்தினுலும் அனுமானத்தினுலும் உண்டாகாததினுல், ஶப்தத்தினுலேயே உண்டாக வேண்டும்.

வா. வி:—அந்த ஶப்தத்தினுல் ப்ரஹ்ம ஞானம் உண்டாக வேண்டுமாயின்—பூர்வத்தில் ஶப்தத்தினுலேயே ப்ரஹ்ம ஞானம் உண்டாக வேண்டும். மற்றும் அந்த ஶப்தத்தினுல் ப்ரஹ்ம ஞானம் உண்டாக வேண்டுமாயின், மறுபடியும் ஶப்தத்தினுலேயே உண்டாக வேண்டும். இப்படி அனவஸ்தை உண்டாகிறது. ஆகையால் ரூட ஶப்தத்தினுல் ப்ரஹ்ம ஞானம் உண்டாவது எப்படிப் பொருந்தும்? இப்படியே லக்ஷணுவ்ருத்தியினுலாகட்டும், கௌணீ வ்ருத்தியினுலாகட்டும் ப்ரஹ்மத்தின் அறிவு (ஞானம்) ஆக வேணுமாயின், பூர்வத்தில் ப்ரஹ்மத்தின் (சித்தின்) ஞானம் இருக்க வேணும். அந்த சித்தின் ஞானமும் ஶப்தத்தினுலேயே உண்டாக வேணும். இப்படி அனவஸ்தை என்கிற தோஷம் வருகிறபடியால் ப்ரஹ்ம ஞானம் பதத்தின் ரூட ஶக்தியினுலாவது, லக்ஷணு வ்ருத்தியினுலாவது, கௌணீ வ்ருத்தியினுலாவது வருகிறதில்லை.

பி. வா:—பதத்தினுல் ப்ரஹ்ம ஞானம் ரூட ஶக்தியினுலும், லக்ஷணு வ்ருத்தியினுலும், கௌணீ வ்ருத்தியினுலும் உண்டாகாமற்போயினும், யௌகிக பதத்தினுல் ப்ரஹ்ம ஞானம் உண்டாகலாமென்று நாங்கள் சொல்லலாமல்லவா?

வா. வி:—பங்கஜமென்கிற யௌகிக பதத்தினுல் பங்கஜனி கர்த்ரு (சேற்றில் பிறந்த) என்கிற விஶிஷ்ட வஸ்துவே தெரிய வருகிறது. அகண்ட வஸ்து தெறிவதில்லை. அத்வைத ப்ரஹ்மம் விஶிஷ்ட வஸ்து அல்ல. அகண்ட வஸ்து. ஆகையால் யௌகிக பதத்தினுல் அகண்டமான = விஶிஷ்டமல்லாத ப்ரஹ்மத்தின் ஞான முண்டாகாது.

பி. வா:—வாக்யத்தினுல் ப்ரஹ்மத்தின் ஞானம் உண்டாகலாமல்லவா?

வா. வி:—யௌகிக பதத்தைப் போலவே, வாக்யங்களும் விஶிஷ்ட பதார்த்தங்களைப்போதிக்கின்றன. அத்வைத ப்ரஹ்மம் அகண்டமானது, விஶிஷ்டமல்லாதது. ஆகையால் வாக்யங்களும் அகண்டமான ப்ரஹ்மத்தைப் போதிக்காது. மற்றும் ஶப்தங்கள் த்ரவ்யம், குணம், க்ரியா, ஜாதி, பேதம் முதலிய தர்மங்களை நிமித்தப்படுத்திக்கொண்டு ப்ரவ்ருத்தமாகின்றன. ப்ரஹ்மத்தில் த்ரவ்யம், குணம், க்ரியா, ஜாதி, பேதம், முதலிய எந்த தர்மங்களும் இல்லாததினால், ஶப்தம் முக்கிய வ்ருத்தியினால் ப்ரஹ்மத்தைப் போதிக்காதென்று சங்கராசார்யரே ப்ருஹதாரண்யக பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். ஆகையால் ப்ரஹ்மத்தை வேதமும் போதிக்காது. ஆகையால் "அத்வைதிகளின் ப்ரஹ்மம் (ஞானம்) வேதாந்த வேத்யம், பௌத்தர்களின் விஞ்ஞானமும், ஶூன்யமும் வேதாந்த வேத்யமல்லாததினால் வெவ்வேறானவை" என்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—(பதிலில்லை.)

பி. வ:—பௌத்தர்களின் விஞ்ஞானம் அநேகம், க்ஷணிகம், அத்வைதிகளின் விஞ்ஞானமொன்றே, நித்யமானது என்கிற விஷயத்தில் அத்வைத மதத்திற்கும், பௌத்த மதத்திற்கும் பேதமிருக்கிறதல்லவா?

வா. வி:—இந்த அம்சத்திலும் பேதமில்லை.

பி. வா:—பௌத்தர்கள்—ஞானம் நித்யமென்றும், ஒன்றேயென்றும் ஒப்புக்கொண்டிருந்த பக்ஷத்தில், அத்வைத மதமும் பௌத்த மதமும் ஒன்றேயாகும். அல்லது அத்வைதிகள் ஞானம் (ப்ரஹ்மம்) க்ஷணிகம், அநேகம் என்று ஒப்புக்கொண்டாலாவது இரண்டு மதமும் ஒன்றேயாகலாம். அப்படி இருவரும் ஒப்புக்கொள்ளாததினால் இரண்டு மதமும் எப்படி ஒன்றேயாகும்?

வா. வி:—விஞ்ஞானவாதி பௌத்தர்களில்—ஞானம் நித்யம் என்று சொல்லுகிறவர்களென்றும் அநித்யமென்று சொல்லுகிறவர்களென்றும் இரண்டு ப்ரபேதங்களுண்டு. ஆகையால்—ஞானம் நித்யமென்று சொல்லும் பௌத்த மதமும், அத்வைத மதமும் ஒன்றேயாகிறது.

பி. வா:—பௌத்தர்கள்—நித்ய ஞானத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்களென்பதற்கு ஆதாரமென்ன?

வா. வி:—உங்கள் அத்வைத க்ரந்தங்களும், பௌத்த க்ரந்தங்களுமே ஆதாரங்கள்.

பி. வா:—அத்வைத க்ரந்தங்களைச் சொல்லும்?

வா. வி:—இது எந்த க்ரந்தம் பாரும்?

பி. வா:—நம் * சங்கர பாஷ்யம், மற்றும் அதற்கு வ்யாக்யான மான பாமதீ என்கிற க்ரந்தம். வாசஸ்பதிகள் செய்தது.

வா. வி:—இவ்வாக்யங்களுக்கு அபிப்ராயமென்ன?

பி. வா:—'ஸர்வதானுப பத்தேஶ்ச' என்கிற 2-2-32-வது ப்ரஹ்ம ஸூத்ரத்தினால், ஸூத்ரகாரர் விஞ்ஞானவாதிகளான பௌத்தர்களை அநேக விதமாகக் கண்டித்து பௌத்த மதத்தை விசாரிப்பதற்கு ஆரம்பிக்கவே—ஶப்த தோஷங்களும், அர்த்த தோஷங்களும் அகப்பட்டு, அந்த பௌத்த மதம் மணல் கிணற்றைப்போல் நஷ்டமாகிறதென்று சங்கராசார்யர் சொல்லியதற்கு, பாமதியில்—அர்த்த தோஷத்தை அறிவிப்பதற்காக, பௌத்தர்கள்—ஆத்மா இல்லை என்று ஒப்புக்கொண்டு, ஆலய விஞ்ஞானம் (ஆத்மா) ஸமஸ்தவாஸனாதாரமென்று சொல்லிக்கொண்டே, நித்யமான ஆத்மா (ஆலய விஞ்ஞானம்) உண்டென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆகையால் அவர்கள் (பௌத்தர்கள்) வ்யாஹத பாஷிகளென்று சொல்லியிருக்கிறார்கள்.

வா. வி:—இந்த க்ரந்தத்தினால் பௌத்தர்கள்—விஞ்ஞானம் நித்யமென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்களென்று ஸித்திக்கிறதா இல்லையா?

பி. வா:—(பதிலில்லை.)

---

* யதாயதாயம் வைநாஶிகஸமய உபபத்திமத்வாய பரீக்ஷ்யதே ததா ததா விகதாகூபவத் விதீர்யத ஏவ, ந காஞ்சிதப்யத்ரோபபத்திம் பஶ்யாம: (ஶாங்கர பாஷ்யம்.)

அர்த்ததஶ்ச நைராத்ம்யமப்யுபேத்யாலய விஞ்ஞானம் ஸமஸ்தவாஸனாதாரமப்யுபகச்சன் அக்ஷராமாத்மானம் அப்யுபைதி (பாமதீ.)

வா. வி:—இது எந்த க்ரந்தம்?

கோர்ட்:—எத்தனை க்ரந்தங்களை விசாரிக்கிறீர்கள்? போதும், முடித்து விடுங்கள்.

வா. வி:—(To the Court) மஹா ப்ரபோ! பௌத்தர்களின் விஞ்ஞானம் நித்யமென்கிற விஷயத்தில் அநேக ஆதாரங்களிருக்கின்றனவென்று தெரிவிப்பதற்காக விசாரிக்கிறோம். வேண்டாமெனின், விட்டுவிடுகிறோம். ஆவஶ்யகமுண்டானபோது கேழ்ப்பதற்கு உத்திரவு ஆகவேணும். வேறு விஷயத்தை விசாரிப்பதற்கும் உத்திரவு ஆகவேணும்.

கோர்ட்:—எஸ். விசாரியுங்கள்.

வா. வி:—உங்களிட ப்ரஹ்மம் ஸவிஶேஷமா? (தர்மத்துடன் கூடியதா) அல்லது நிர்விஶேஷமா? (ஸகல தர்மரஹிதமா?)

பி. வா:—நம் மதத்தின்படிக்கு — ப்ரஹ்மம் ஸகல தர்மரஹிதமானது.

வா. வி:—ஸகல தர்மரஹிதமானதென்று எப்படித் தெரிகிறது?

பி. வா:—நம் சங்கர பகவத் பாதரின் * விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம், † ப்ருஹதாரண்யக பாஷ்யம், ‡ ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யம் இவைகளால் ப்ரஹ்மம் நிர்விசேஷமென்று (நாம ரூப கர்ம பேத ஜாதி குணம் முதலிய ஸகல தர்மரஹிதமென்று) தெரியவருகிறது.

வா. வி:—பௌத்தர்களின் விஞ்ஞானம் நிர்விசேஷமா? (ஸகல தர்மரஹிதமா?) ஸவிஶேஷமா? (தர்மங்களுடன் கூடியதா?)

பி. வா:—பௌத்தரின் விஞ்ஞானம் நிர்விசேஷமே (ஸகல தர்மரஹிதமே.)

---

* நிர்விஶேஷத்வாச் சூன்யவத் ஶூன்ய:।

† யஸ்மின்ன கஶ்சித்விஶேஷோஸ்தி நாம வா ரூபம் வா கர்ம வா பேதோ வா ஜாதிர்வா குணோ வா (ப்ரு. ஶா. பா. 2-3-6.)

‡ ஸமஸ்த விஶேஷரஹிதம் நிர்விகல்பகமேவ ப்ரஹ்ம ப்ரதிபத்தவ்யம் ந தத்விபரீதம். (ப்ர. ஸூ. ஶா. பா. 3-2-11.)

வா. வி:—ஶாஸ்த்ரிகளே! உங்களிருவரிட மதத்திலும் அங்கீ கரிக்கப்பட்ட ஞானம் நிர்விசேஷமாகையால் (ஸகல தர்மரஹித மாகையால்) பௌத்தரின் ஞானத்தில் க்ஷணிகத்வமென்கிற தர்ம முண்டோ? அத்வைதிகளின் ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) நித்யத்வ மென்கிற தர்மமுண்டோ?

பி. வா:—அத்வைதிகளின் ஞானத்தில் நித்யத்வமென்கிற தர்மமில்லை. பௌத்தரின் ஞானத்தில் க்ஷணிகத்வமென்கிற தர்ம மில்லை.

வா. வி:—க்ஷணிகத்வ தர்மம் பௌத்தரின் ஞானத்திலில்லை. நித்யத்வம் உங்களிட ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) இல்லை எனில்—க்ஷணிகத்வ நித்யத்வ தர்மங்களிருப்பதினால் பேதமுண்டென்பது எப்படிப் பொருந்தும்? பொருந்தாதல்லவா?

பி. வா:—ஆசார்யரே! நம்மிட விஞ்ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) நித்யத்வ ரூபமான தர்மமில்லாவிடினும், * நித்யத்வம் ஞானஸ்வரூபம். பௌத்தரின் ஞானத்தில் க்ஷணிகத்வமில்லாவிடினும், க்ஷணிகத்வம் பௌத்தரின் ஞானஸ்வரூபம் என்று சொல்லியிருப்பதால், நம் விஞ்ஞானத்திற்கும் பௌத்தர்களின் விஞ்ஞானத்திற்கும் பேதம் பொருந்துகிறது.

வா. வி:—'பட்டஸ்ய கட்யாம் ஸரட: ப்ரவிஷ்ட:' நம் ஆசார்யரின் இடுப்பில் ஓணான் புகுந்துக் கொண்டதென்று சொல்லியதும், விசார சீலனான சீடன் 'சித்ராபாவாத் கதம்ப்ரவேஶ:' இடுப்பில் ஸந்தே இல்லாமலிருக்க ஓணான் ப்ரவேசிப்பதெப்படி என்று நகைத்தான். மற்றொரு மூடனான சீடன் அய்யய்யோ நம் ஆசார்யரின் இடுப்பில் ஓணான் புகுந்ததேயென்று அழத்துடங்கினான் என்று ப்ராசீனர்கள் கதை சொல்லுவார்கள். தாங்கள் விசார சீலனான சீடனைப்போல் விசாரம் செய்ய வேணும். விசாரிக்காமலே சொல்லியவைகளை யெல்லாம் ஒப்புக்கொள்ளக்கூடாது.

---

* ஸ்தைர்யம் ஸ்வரூபாத்மகம் சைதன்யஸ்ய ச பங்குரத்வமிவ மே ஸர்வஸ்ய தே தர்ஶனே (ஸம்க்ஷேப ஶாரீரகம் 2-31.)

*பி. வா:*—நித்யத்வம், க்ஷணிகத்வம் ஞான ஸ்வரூபமென்று ஸம்க்ஷேபசாரீரககாரர் சொன்னதற்கு என்ன அனுபபத்தி இருக்கிறது?

*வா. வி:*—'ஸகல காலவர்த்தித்வம்' என்கிற அநேக பதார்த்தங்களுடன் கூடின நித்யத்வம் அநேக பதார்த்தங்களுடன் கூடிக்கொண்டிராத அகண்டமான ப்ரஹ்ம ஸ்வரூபமென்பதெப்படி? ஒரே நொடியிலிருப்பதென்கிற அநேக பதார்த்தங்களுடன் கூடிய க்ஷணிகத்வம், எந்த பதார்த்தங்களுடனும் கூடியிராத அகண்டமான ஞானஸ்வரூபமாகிறதெப்படி என்பதை விசாரிக்காமலே, க்ஷணிகத்வம் பௌத்தரின் ஞானஸ்வரூபம், நித்யத்வம் அத்வைதிகளின் ஞான (ப்ரஹ்ம) ஸ்வரூபமாகையால் அவைகளுக்கு பேதம் பொருந்துகிறதென்பது எப்படி யுக்தமாகும்?

*பி. வா:*—(பதிலில்லை.)

*பி. வ:*—க்ஷணிகத்வ நித்யத்வ விஷயத்தில் பேதமிருக்க வேண்டாம். அத்வைத ப்ரஹ்மம் (ஞானம்) ஏகத்வமுள்ளது (ஒன்றே).. பௌத்தரின் விஞ்ஞானம் அநேகத்வமுள்ளது (அநேகமானது). ஆகையால் அவைகளுக்கு பேதமிருக்கிறதல்லவா?

*வா. வி:*—சாஸ்த்ரிகளே! அத்வைதிகளின் ப்ரஹ்மத்தில் ஏகத்வத்தை அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. மற்றும், அத்வைதிகளின் ஞானமும் (ப்ரஹ்மும்,) பௌத்தரின் ஞானமும் நிர்விசேஷம் (ஸகல தர்மரஹிதம்.) ஆகையால் அத்வைதிகளின் ஞானத்தில் ஏகத்வமும் பொருந்தாது. பௌத்தரின் ஞானத்தில் அநேகத்வமும் பொருந்தாது. ஆகையால் ஏகத்வபஹுத்வங்களினால் பௌத்தாத்வைதிகளின் விஞ்ஞானங்களுக்கு பேதம் வருகிறதில்லை. நிர்விசேஷமாகையால் பேதமுமில்லை.

*பி. வா:*—அத்வைதிகள்—ப்ரஹ்மத்தில் ஏகத்வத்தை ஒப்புக்கொள்ளவில்லை என்கிற விஷயத்தில் ஆதாரமென்ன?

வா. வி:—சாஸ்த்ரிகளே! ப்ரஹ்மம் நிர்விசேஷம் (ஸகலதர்ம ரஹிதம்) என்று சொல்லுவதினலேயே, ஏகத்வதர்மமில்லை என்று ஸித்திக்கிறது. அவ்வளவேயன்றி — சங்கராசார்யரின் க்ரந்தம், அதற்கு மதுஸூதன ஸரஸ்வதிகள் செய்த ஸித்தாந்த பிந்து என்கிற வ்யாக்யானம் இவைகளே முதலிய பல நூல்களே ஆதாரங்களாயிருக்கின்றன.

பி. வா:—சங்கராசார்யரின் வாக்யத்தைக் காட்டும்.

வா. வி:—* இதோ இவ்வாக்யத்தையும் இதின் வ்யாக்யானத்தையும் பார்த்து, இதின் அபிப்ராயத்தைத் தாங்களே சொல்லும்.

பி. வா:—'ஏகமேவா த்விதீயம்' என்கிற ஶ்ருதியில் ப்ரஹ்மத்திற்கு ஏகத்வம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ப்ரஹ்மத்தில் ஏகத்வம் இல்லை என்று எப்படிச் சொல்லுகிறீர்களென்கிற சங்கைவரவே-'நவா கேவலத்வம்' என்கிற வாக்யத்தினல் ஏகத்வம் அவித்யா கல்பிதம் (பொய்) ஆகையால் ப்ரஹ்மத்தில் ஏகத்வம் இல்லை என்று சங்கராசார்யர் சொல்லியிருக்கிருரென்று அபிப்ராயம்.

வா. வி:—சாஸ்த்ரிகளே! சங்கராசார்யரின் இவ்வாக்யத்தினல் ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) அத்வைத மதத்தின்படிக்கு ஏகத்வம் இல்லை என்று ஸித்திக்கிறதா இல்லையா?

பி. வா:—அத்வைத மதத்தின்படிக்கு ஏகத்வம் ஞானத்தில் (ப்ரஹ்மத்தில்) இல்லை என்று ஸித்திக்கிறது.

வா. வி:—பௌத்தரின் ஞானத்திற்கு நிர்விஶேஷத்வத்தை (ஸகலதர்மராஹித்யத்வத்தை) ஒப்புக்கொள்ளுவதினல், நாஞத்வ (அநேகத்வ) தர்மத்தை ஒப்புக்கொள்ளுவது எப்படிப் பொருந்தும்?

---

* நவா கேவலத்வம் (தஸஶ்லோகீ 10.)

நது ஏகமேவாத்வீதீய மிதி ஶ்ருத்யா ஏகத்வம் ப்ரதிபாத்யதே நேத்யாஹ! நவா கேவலத்வமிதி-கேவலத்வம் எகத்வம் தச்சாவித்யகத்வாத்.

பி. வா:—வாஸ்தவமான அநேகத்வதர்மத்தை ஒப்புக்கொள்ளுவதில்லை. கல்பிதமானதே (பொய்யே).

வா. வி:—அத்வைதிகள் சொல்லும் ஞானத்தில் நித்யத்வமுமில்லை, ஏகத்வமுமில்லை. பௌத்தர்கள் சொல்லும் ஞானத்தில் க்ஷணிகத்வமும் இல்லை, அநேகத்வமுமில்லை என்றபின் பௌத்தரின் விஞ்ஞானத்திற்கும் அத்வைதிகளின் விஞ்ஞானத்திற்கும் பேதமுண்டென்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்?

பி. வா:—ஐயா! 'சோத்யம்வா பரிஹாரோ வா க்ரியதாம் த்வைதபாஷயா' என்று சொல்லியவாறு, த்வைத மதத்திலேயே ஶங்கிப்பது ஸமாதானம் சொல்லுவது இவை முதலியவைகள் உண்டேயொழிய * த்வைதமும் அத்வைதமுமில்லாத நம்மைப் போலொத்தவர்களுக்கு இந்த மித்யாவிசாரம் அபேக்ஷிதமல்ல. ப்ராந்தர்களே விசாரம் செய்யவேண்டும். நம்மைப்போன்ற பண்டிதர்கள் கல்லைப்போல் இருக்கவேண்டுமென்று நம் சங்கரபகவத்பாதரே சொல்லியிருப்பதினால்--நாம் இனி உம்முடன் எந்தவிசாரமும் செய்யமாட்டோம். உங்களிட எந்த கேழ்விகளுக்கும் எதுவும் பதிலளிக்காமல் கல்லைப்போலிருப்போம்.

## ஶூன்யவாதி பௌத்தாத்வைத மத ஸாம்ய விஷயத்தில் வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! மதங்கள் வெவ்வேறாக வேண்டியிருப்பின்—அந்தந்த மதங்களில் சொல்லப்படும் தத்வங்கள் வெவ்வேறாக இருக்கவேண்டும். அத்வைதிகள் சொல்லும் தத்வங்களும், ஶூன்யவாதிகளான பௌத்தர்கள் சொல்லும் தத்வங்களும் ஒன்றேயாகையால், அத்வைதமதம் ஶூன்யவாதிகளான பௌத்தரின்மதமே. எப்படி எனில்:—

---

*கிம் வாபேக்ஷ்ய மிஹாபி மய்யதிதாம் மித்யாவிசாராதிகம் த்வைதாத்வைத விவர்ஜிதே ஸமரஸே மௌனம் பரம் ஸம்மதம் (ப்ரௌடானுபூதி 11)

மித்யாவாத விசாரசிந்தனமஹோ குர்வந்த்யத்ருஷ்டாத்மகா ப்ராந்தா ஏவ ந பாரகா த்ருடதியஃ தூஷ்ணீம் ஶிலாவத் ஸ்திதாஃ (13)

**அத்வைதமத தத்வங்கள்.**

(1) ப்ரஹ்மமொன்றே ஸத்யம்.

(2) அந்த ப்ரஹ்மத்தில் ஸமஸ்த ஜகத்தும் அஞ்ஞானத்தினல் கல்பிதம், ஸ்வப்னத்தைப் போலவும், ஶுக்திரஜதத்தைப் போலவும் ஶஶவிஷாணத்தைப் போலவும் பொய்யானது.

(3) 'அஹம் ப்ரஹ்ம, அஹம் ப்ரஹ்ம' என்று உபாஸனை செய்து ப்ரஹ்மபாவரூப மோக்ஷத்தை அடையவேண்டியது.

**பௌத்தமத தத்வங்கள்.**

(1) ஶூன்யமொன்றே ஸத்யம்.

(2) அந்த ஶூன்யத்தில் ஸமஸ்த ஜகத்தும் அஞ்ஞானத்தினல் கல்பிதமானது. ஸ்வப்னத்தைப் போலவும், ஶுக்தி ரஜத்தைப்போலவும், ஶஶவிஷாணத்தைப்போலவும் பொய்யானது.

(3) 'அஹம் ஶூன்யம், அஹம் ஶூன்யம்' என்று உபாஸித்து, ஶூன்யபாவரூப மோக்ஷத்தை அடையவேண்டியது.

என்று இப்படி இரண்டுமத தத்வங்களும் ஒன்றேயாயிருப்பதினல் மேற்சொன்ன இரண்டு மதங்களுக்கும் பேதமில்லை. ஆகையால் அவைதிகமான அத்வைதமதம் அனர்த்தத்திற்கு (கெட்ட பலன்களுக்கு) காரணமாகையால்-ப்ரதிவாதிகளான அத்வைதிகள் இம்மதத்தை வைதிக மதமென்று உபதேஶிக்கக்கூடாது. வைதிகர்களான ஆஸ்திகஜனங்கள் இந்த அத்வைத மதத்தை ஆஶ்ரயிக்கக்கூடாது. மோக்ஷம் முதலிய புருஷார்த்தங்களுக்கு ஸாதகமான வைதிகமான த்வைதமதத்தையே ஆஶ்ரயித்து, மோக்ஷம் முதலிய புருஷார்த்தங்களை அடையவேண்டியதென்று தீர்மானித்து டிக்ரீ கொடுக்கவேணுமாய்க் கோருகிருேம்.

## ப்ரதிவாதி வக்கில் ஆர்க்யுமெண்ட்.

*பி. வா. வ:*—(To the Court) மஹாப்ரபோ! ஜகத்து கல்பிதமென்கிற அம்ஶத்தில் அத்வைத மதத்திற்கும், ஶூன்யவாதிகளான பௌத்த மதத்திற்கும் ஸாம்யமிருப்பினும், இதர விஷயங்களில் பேதமிருப்பதினல், அத்வைதமதமும் பௌத்தமதமும் ஒன்றேயாகிறதில்லை.

| அத்வைதமத தத்வங்கள். | ஶூன்யவாதி பௌத்தமத தத்வங்கள். |
|---|---|
| (1) ப்ரஹ்மம், தத்வம் ஸத்யம், ஜகத்தின் ப்ரமத்திற்கு அதிஷ்டானம். | (1) ஶூன்யம், தத்வம், ஸத்யம் ஜகத்தின் ப்ரமத்திற்கு அதிஷ்டானம். |
| (2) ஜகத்து வ்யாவஹாரிக ஸத்யம். | (2) ஜகத்து வ்யாவஹாரிக ஸத்யமல்ல. |
| (3) வேதம் ப்ரமாணம். | (3) வேதம் ப்ரமாணமல்ல. |
| (4) ஸ்வர்க்காதி பரலோகங்களை ஒப்புக்கொண்டே அவைகளுக்கு ஸாதகமான புண்ய கர்மங்களைச் செய்கிறார்கள். | (4) ஸ்வர்க்காதி பரலோகங்களை ஒப்புக்கொள்ளார். அவைகளுக்கு ஸாதகமான புண்ய கர்மங்களைச் செய்வதில்லை. |
| (5) அத்வைதிகள் ஆஸ்திகர்கள். | (5) பௌத்தர்கள் நாஸ்திகர்கள். |
| (6) சங்கராசார்யர் பௌத்தமதத்தைக் கண்டித்திருக்கிறார். | (6) புத்தர் பௌத்தமதத்தை ஸ்தாபித்திருக்கிறார். |

இவைகளே முதலிய விஷயங்களில் அத்வைதமதத்திற்கும், பௌத்தமதத்திற்கும் பேதமிருப்பதினால் அத்வைதமதம் பௌத்தமதத்தைவிட வேறானது. இரண்டு மதங்களும் ஒன்றேயல்ல. சில விஷயங்களில் அத்வைதமதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் ஸாம்யமிருந்த மாத்ரத்தினால் இரண்டு மதங்களும் ஒன்றேயாயின்-எல்லா மதத்திலும் சிலயம்ஶங்களில் ஸாம்யமிருப்பதினால், எல்லா மதங்களும் ஒன்றேயாக வேண்டியதாகும். அப்படி ஒப்புக்கொள்ளுவது யுக்தமல்ல. ஆகையால் அத்வைதமதம் வேறு, பௌத்தமதம் வேறு. ஸித்தாந்தலேஶ ஸங்க்ரஹமே முதலிய அத்வைத க்ரந்தங்களின்படிக்கு—யஞ்ஞாதி கர்மங்களைச் செய்து 'அஹம் ப்ரஹ்ம, அஹம் ப்ரஹ்ம' என்று உபாஸனை செய்து, அந்த: கரணஶுத்தியான பிறகு வேதாந்த ஶாஸ்திரங்களினால், 'அஹம் பிரஹ்ம.' என்கிற அபரோக்ஷ ஞானத்தை ஸம்பாதித்துக்கொண்டு, அந்த ஞானத்தினால் அஞ்ஞானத்தைப் போக்கடித்துக்கொண்டு, நிர்குணப்ரஹ்மஸ்வரூப மோக்ஷத்தை அடைய

வேண்டியது. (தான் நிர்குண ப்ரஹ்மமல்ல என்கிற ப்ரமையைப் போக்கடித்துக் கொள்ள வேண்டும்). இதுவே உத்தமமான பலனுகும்.

ப்ரஹ்மம்--ஸர்வேஶத்வம், ஸ்வதந்த்ரத்வம், ஸர்வஜ்ஞத்வம், ஸர்வோத்தமத்வம், ஸத்யஸங்கல்பத்வம், ஸத்யகாமத்வம் இவைகளே முதலிய கல்யாண குணங்களினுல் பூர்ணமானது. ஜகத்து ஸத்யமானது. ஜீவன் பரமாத்மனைவிட வேருனவன் (பின்னன்). மோக்ஷம் ஜீவபரமாத்மாக்களின் பேதஞானத்தினுலுண்டாகிறது. மோக்ஷத்திலும் ஜீவபரமாத்மாக்களுக்கு பேதமுண்டு என்கிற இவைகளே முதலிய த்வைதிகளால் சொல்லப்படும் ப்ரமேயங்கள் வேத ஸூத்ரகீதாக்களில் சொல்லப்பட்டிருப்பினும், அவைகளுக்கு அந்த தத்வங்களை ப்ரதிபாதிப்பதில் தாத்பர்யமில்லாததினுல், அத்வைத மதம், அதில் சொல்லியவாரு ஆசரிப்பது, அந்த மோக்ஷம் இவைகளெல்லாம் முதலாவது படியாகும். (கனிஷ்டமானது Lower stage) நம் அத்வைதமதம், அதில் சொல்லியவாரு ஆசரிப்பது, அந்த நிர்குண ப்ரஹ்மபாவரூபமான மோக்ஷம் இவைகள் மேலுள்ளபடியாகும் (உத்தமமானது Higher stage) ஆகையால், உத்தமபலனை அபேக்ஷிப்பவர்கள்-அத்வைதமதத்தை ஆஶ்ரயித்து, அதில் சொல்லியவாரு ஆசரிக்கவேண்டியதென்று கோர்ட்டார் தீர்மானிக்கவேணுமாய்க் கோருகிறேம்.

## வாதி வக்கீல் ரீ ஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) மஹாப்ரபோ! இந்த ப்ரதிவாதி 'ப்ரஹ்மஸத்யம் ஜகன் மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:' என்று ப்ரஹ்மத்தைவிட வேருன எல்லா ஜகத்தும், ஶஶவிஷாணம் (முயற்கொம்பு) மருமரீசிகா (கானல்) கந்தர்வநகரம் இவைகளைப் போல் அஸத்யமென்று பௌத்தர்களைப்போல் ஒப்புக்கொண்டிருப்பதினுல், வேதம் பொய், அதற்கு ப்ராமாண்யம் பொய், ஸ்வர்க்காதி பரலோகங்கள் பொய், அதற்கு ஸாதனங்கள் பொய் என்று ஸித்திக்கிறது. ஆகையால் இவ்விஷயத்தில் அத்வைத மதத்திற்கும் பௌத்தமதத்திற்கும் பேதமில்லை. அத்வைதிகளைப்போல் யஞ்ஞம், பரலோகம் முதலிய ஜகத்து வ்யாவஹாரிக

ஸத்யமானதென்று பௌத்தர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்களென்பது பௌத்தர்களின் க்ரந்தத்தினாலும், அத்வைத க்ரந்தத்தினாலும் ஸித்திக்கிறபடியால், அவ்விஷயத்திலும் இவ்விரண்டு மதங்களுக்கும் பேதம் வருகிறதில்லை.

ப்ரமாணங்கள் வேதம் முதலிய ஜகத்துக்கு வ்யாவஹாரிக ஸத்யத்வத்தைத் தெரிவிக்கிறதில்லை, பாரமார்த்திக ஸத்யத்வத்தையே தெரிவிக்கின்றனவென்று சங்கரபாஷ்யம் பாமதி க்ரந்தங்களினால் தெரியவருகிறபடியால், ப்ரமாணங்கள் வேதம் முதலிய ஜகத்துக்கு வ்யாவஹாரிக ஸத்யத்வத்தைச் சொல்லுகிறதென்பது யுக்தமல்ல.

வ்யாவஹாரிக ஸத்யமெனினும் அஸத்யமேயாகிறதென்று அபேயதீக்ஷிதர் முதலானவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறபடியால் ஜகத்து அஸத்யமெனின் எப்படி ப்ரமாணவிரோதம் வருகிறதோ, அப்படியே வ்யாவஹாரிக ஸத்யமெனினும் ப்ரமாண விரோதம் வருகிறது.

சங்கராசார்யரின் க்ரந்தங்களினாலும், சங்கரவிஜயத்தினாலும் சங்கராசார்யர் பௌத்தமதத்தைக் கண்டிக்கவில்லை, குமாரிலபட்டரே கண்டித்திருக்கிறாரென்று ஸித்திக்கிறபடியால் "பௌத்த மதத்தை சங்கராசார்யர் கண்டித்திருப்பதினால் சாங்கராத்வைத மதம் பௌத்தமதமல்ல" என்று சொல்லுவது யுக்தமல்ல.

அத்வைதமதம் பௌத்தமதமே என்று ஸாக்ஷான்னாராயணாவதாரரான வேதவ்யாஸரே முதலியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். சங்கராசார்யருக்கு முன்னமே, (அத்வைதமதம் எந்தகாலத்தில் ப்ரசாரத்திற்கு வந்ததோ அக்காலத்திலேயே) அத்வைத மதம் பௌத்தமதமென்று அக்காலத்திய வித்வான்கள் சொல்லியிருக்கிறார்களென்று கௌடபாதாசார்யர், சங்கராசார்யர் முதலிய அத்வைதிகளின் க்ரந்தங்களினால் தெரியவருகிறது. சங்கராசார்யர் முதலிய அத்வைதிகள்—பௌத்த மதத்திற்கும், தம்மிட மதத்திற்கும் ஸாம்யத்தை ஒப்புக்கொண்டு, தம்மதத்திலிருக்கும் ஆக்ரஹத்தினால் ஏதோ பேதத்தைச் சொல்லுவதைப்போல் காட்டியிருக்கிறாரேயொழிய வஸ்துத: பேதம் இல்லவே இல்லை.

பாஸ்கராசார்யர், விஞ்ஞானபிக்ஷு முதலிய பண்டிதர்கள் அத்வைதமதம் பௌத்த மதமென்று சொல்லியிருப்பதினால் "த்வைதிகள் இப்பொழுது த்வேஷத்தினால் சொல்லுகிறார்கள்" என்று சொல்லுவது சரியல்ல. அத்வைதமத தத்வங்களுக்கும் பௌத்தமதங்களுக்கும் பேதமில்லாததினால் அவ்விரண்டு மதங்களும் ஒன்றே என்பது த்வேஷமூலகமானதென்று கல்பிப்பதற்குக் காரணமில்லை.

கோர்ட்டில் ஒருவன் ஓர்விஷயத்தில் ஸாக்ஷ்யம் சொல்லின்-அதற்குப் பாதகம் வராவிடின், அவ்விஷயத்தை ஸாக்ஷி சொல்லியபடிக்கே ஒப்புக்கொள்ளுகிறார்கள். அப்படியே ஒப்புக்கொள்ளத் தக்கது. அது எப்படியோ அப்படியே சங்கராசார்யருக்கு பூர்வ காலத்திலிருந்த ஜனங்கள், சங்கராசார்யரின் காலத்திலிருந்த ஜனங்கள், சங்கராசார்யரின் பிறகு இருந்த ஜனங்களும் அத்வைத மதம் பௌத்தமதமே என்று சொல்லியிருக்கிறார்கள். அதற்கு பாதகமொன்றும் வராததினால் அதை அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டியது. சங்கராசார்யர் முதலிய அத்வைதிகள் பௌத்த மதத்திற்கும், அத்வைதமதத்திற்கும் அநேக அம்சங்களில் ஸாம்யத்தை ஒத்துக்கொண்டு, ஏதோ சில அம்சங்களில் பேதத்தைச் சொல்லுவதுபோல் நடிக்கிறார்கள். அந்த தத்வங்களை துலனை (எடை) செய்தபோதிலும் அப்படியே ஸித்தமாகிறது. வஸ்துதः பேதமில்லை என்பதைப் பூர்வத்திலேயே அறிவித்துக் கொண்டிருக்கிறோம். ஆகையால் அத்வைதமதம் பௌத்தமதமே யாகிறது.

ப்ரஹ்மம் ஸத்யம், ஞானஸ்வரூபம், ஆநந்தஸ்வரூபம், அஞ்ஞேயம், அவாச்யம், ஸகலதர்ம ரஹிதம் என்று அத்வைதிகள் சொல்லுவதைப்போலவே, ஶூன்யம், ஸத்யம் ஞானரூபம், ஆனந்தரூபம், அஞ்ஞேயம், அவாச்யம், ஸகலதர்மரஹிதம் என்று பௌத்தரும் சொல்லுகிறார்களென்பது—பௌத்த க்ரந்தங்களினாலும், அத்வைத க்ரந்தங்களினாலும் ஸித்திக்கிறபடியால், கேவலம் ஶூன்யம் ப்ரஹ்மம் என்று பெயர் வேரேயொழிய வஸ்து பேதமில்லை. அத்வைதிகள் தங்களிட ப்ரஹ்மத்தில் எந்த பேதத்தையும்

ஒப்புக்கொள்ளாததினுல், ஶூன்யத்தின் பேதத்தையும் ப்ரஹ்மத்தில் ஒப்புக்கொள்ளுவதில்லே. பேதக தர்மமும் இல்லாத்தினுல் பேதம் ஸித்திக்கிறதில்லே. பௌத்தர்களின் ஶூன்யம் பாவரூபமாயின்—ஶூன்யவாதம் ப்ரஹ்மவாதமே என்று சொல்லும் ப்ரஹ்மவித்யாபரணகாரர்—ஶூன்யம் பாவரூபமாயின் ஶூன்யமும் ப்ரஹ்மரூபமே என்று ஒப்புக்கொண்டிருக்கிறர். ஶூன்யம் ப்ரபஞ்சாபாவரூபமாயினும்-அத்வைதஸித்யாதிக்ரந்தங்களில் ப்ரஹ்மம் ப்ரபஞ்சாபாவரூபமென்று ஒப்புக் கொண்டிருக்கிறபடியால், அத்வைதிகளின் ப்ரஹ்மமும் பௌத்தரின் ஶூன்யமும் ஒன்றேயாகிறது.

அத்வைதிகளின் ப்ரஹ்மம் வேதாதி ப்ரமாணங்களினுல் ஸித்திக்கிறதில்லே என்று அத்வைதிகளே ஒப்புக்கொண்டிருப்பதினுல், பௌத்தரின் ஶூன்யத்தைப் போலவே அப்ராமாணிகமே. ஆகையால் அத்வைதிகள் ப்ரஹ்மம் அங்கீகரிப்பதற்கு அர்ஹமல்ல. ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமானதால் ஸித்திக்கிறதென்பது யுக்தமல்ல. ஏனெனில்:—ப்ரஹ்மம் ப்ரமாணங்களினுல் தெரிந்துக்கொள்ளுவதற்கு யோக்யமல்லாததினுல், ஸ்வப்ரகாஶமென்கிற விஷயத்தில் ப்ரமாணங்களில்லே. ப்ரமாணங்களில்லாமலே ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமென்று ஒப்புக்கொள்ளுவதாயின்—ஶஶவிஷாணமும் (முயற்கொம்பும்) ஸ்வப்ரகாஶமென்று ஒப்புக்கொள்ளவேண்டியதாகும். ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமென்று ஒப்புக்கொண்டபோதிலும்-ஸ்வப்ரகாஶமெனின்-இதர ப்ரமாணங்களினுல் அவேத்யம் (தெரிவதல்ல) என்று அத்வைதிகள் சொல்லுவதினுல்—ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமானதாகையால் = இதராவேத்யமானதாகையால் ஸித்திக்கிறது = வேத்யமாகிறது என்று சொல்லுவது ஸ்வவ்யாஹதமாகிறது. ஆகையால் இப்படிச்சொல்லுவது பொருந்தாது. ப்ரஹ்மத்தைப்போலவே அவேத்யமான முயற்கொம்பும் வேத்யமாக வேண்டியதாகும். ஆகையால் அத்வைதிகளின் ப்ரஹ்மம் அங்கீகரிப்பதற்கு அர்ஹமல்ல.

வேதம் அத்வைத ப்ரஹ்மத்தை ப்ரதிபாதிக்கிறதில்லே. வேதத்தினுல் ப்ரதிபாத்யமான ஜகத்து பொய்யாயின் வேதம்

ப்ரமாணம் (ஸத்யமான பதார்த்தத்தைப் போதிப்பது) என்று சொல்லுவது பொருந்தாதாகையால், அத்வைதமதத்தின்படிக் கும் வேதம் அப்ரமாணமேயாகிறது.

பௌத்தர்களும்—"ஸ்வர்க்ககாமஶ்சைத்யம் வந்தேத" என்கிற ஶாஸ்த்ரத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு ஸ்வர்க்கத்திற்காக புண்யகர்மங்களைச் செய்கிறார்கள். மற்றும்—'அஹம் ஶூன்யம் அஹம் ஶூன்யம்' என்று உபாஸித்து ஶூன்யாபரோக்ஷத்தை அடைந்து, நிர்குண ஶூன்யபாவரூப மோக்ஷத்தை, அத்வைதிகளின் நிர்குண ப்ரஹ்மபாவரூப மோக்ஷத்தைப்போலவே அடைகிறார்களென்று அத்வைதிகளைப்போலவே சொல்லிக்கொண்டிருக்கிறபடியால்—"அத்வைதிகள் வேதோக்தமான கர்மங்களைச்செய்து, ஸ்வர்க்காதி லோகங்களையும் அடைகிறார்கள். மற்றும் சுத்தாந்த³கரணர்களாய் ஶ்ரவணாதிகளைச்செய்து ப்ரஹ்மாபரோக்ஷத்தை ஸம்பாதித்துக்கொண்டு, நிர்குண ப்ரஹ்மபாவரூப மோக்ஷத்தை அடைகிறார்கள். பௌத்தர்களும் புண்யகர்மங்களைச் செய்து ஸ்வர்க்காதி லோகங்களையடைவதில்லை, மோக்ஷத்தையும் அடைவதில்லை" என்று சொல்லுவது யுக்தமல்ல. ஏனெனில்:—

யஞ்ஞம் பொய், உபாஸனை பொய், செய்வது பொய், செய்பவன் பொய், அந்த³கரணம் பொய், சுத்தி பொய், ஶாஸ்த்ரம் பொய், வேதம் பொய், அத்வைதிகளின் ப்ரஹ்மம் பொய், பந்தம் பொய், மோக்ஷம் பொய், மோக்ஷத்தை வேண்டும் மனிதன் பொய், ப்ராஹ்மணாதிவர்ணங்கள் பொய், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள் பொய் என்று சொல்லிக்கொண்டே, நாங்கள் பொய்யான ப்ராஹ்மண்யத்தையும் பொய்யான ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்களையுமடைந்து, பொய்யான வேதத்தினால், பொய்யாகச் சொல்லப்படும், பொய்யான யஞ்ஞாதிகளைப் பொய்யாகச்செய்து பொய்யான அந்த³கரணத்தின்பொய்யானசுத்தியை பொய்யாகச் சம்பாதித்துக்கொண்டு பொய்யான ஶ்ரவணாதிகளைச் செய்து, பொய்யான வேதாந்த ஶாஸ்த்ரங்களினால் பொய்யான நிர்குண ப்ரஹ்ம ஞானத்தை பொய்யாக ஸம்பாதித்துக்கொண்டு, பொய்யான மோக்ஷத்தை அடைகிறோம் என்று சொல்லுவது, மலடி

மகன் கானல் ஜலத்தில் ஸ்நானம்செய்து ஆகாய புஷ்பங்களினல் அலங்கரிக்கப்பட்டு முயற்கொம்பு தனுஸ்ஸை பிடித்துக்கொண்டு யுத்தம் செய்கிருன் என்று சொல்லியதைப் போலாகிறதென்பது சிருபிள்ளைகளுக்கும் தெரிந்தவிஷயமே.

'நஹி ஸ்வப்ன ஸாக்ஷாத்யர்த்தம் தர்மே கஶ்சித் ப்ரவர்த்ததே' என்று குமாரிலபட்டர் சொல்லியிருப்பதைப் போலவும், 'ஜ்யோதிஷ்டோமாதி ஶ்ருதி போதிதானுஷ்டானத் பலஸித்தி: ஸ்வாப்ன ஶ்ருதி போதிதானுஷ்டான ப்ரயுக்த பலஸம்வாததுல்யா' என்று ஸித்தாந்தலேச ஸங்க்ரஹகாரர் சொல்லியிருக்கிறபடிக்கும்—அத்வைதிகள் தெரிந்துக்கொண்டிருந்த போதிலும்—'வஞ்சனர்த்த முபன்யாஸ:' என்று சொல்லியவாறு, ஆஸ்திகர்களின் வஞ்சனைக்காகவே கர்மாதிகளைச் செய்கிறவர்களைப்போல் நடிக்கிருர்கள்: நிஜமாக அவர்களிட மதத்தின்படிக்கு கர்மம் செய்யவேண்டியதில்லை. அதற்கு பலமும் இல்லை. அத்வைதிகளுக்குக் கர்மம் செய்வது பொருந்தாது. அதற்கு அவாளுக்கு பலமும் பொருந்தாது. ஆகையால் அத்வைதிகளின் மதம் அவைதிகமான ஶூன்யவாதிகளான பௌத்தரின் மதமும் ஒன்றேயென்று நிர்ணயிப்பதேயொழிய, கோர்ட்டாருக்கு ஏதேதுயுக்தமென்று தோன்றுகிறதோ அவைகளையும் தீர்மானிக்கவேணுமாய்க் கோருகிறோம்.

## விஞ்ஞானவாதி பௌத்தாத்வைத மதஸாம்ய விஷயத்தில் வாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

வா. வ:–(To the Court) தர்மராஜப்ரபோ!* ஆரோபத்ருஷ்டி: இது முதலிய ஶ்லோகங்களினல்-அதமாதிகாரிகளுக்காக பரிணமத்ருஷ்டி (பரிணமவாதமும்) மத்யமாதிகாரிகளுக்காக வ்யாமிஶ்ரத்ருஷ்டி (விவர்தவாதமும்) உத்தமாதி காரிகளுக்காக த்வைதோபஶமத்ருஷ்டி (ப்ரபஞ்சரஹிதமான ஜீவப்ரஹ்

---

* ஆரோப த்ருஷ்டிருதிதா பரிணமத்ருஷ்டிர்த்வை தோபஶாந்தி ரப வாதக த்ருஷ்டிரந்த்யா। மத்யே விவர்த விஷயாத்வய மிஶ்ரத்ருஷ்டி: வ்யாமிஶ்ர த்ருஷ்டி ரதரோத்தரபூமிபாவாத் (ஸம்க்ஷேபஶாரீரகம் 2. 82.)

க்ருபணதி: பரிணமமுதீக்ஷதே க்ஷபித கல்மஷதீஸ்து விவாத்தாம்। ஸ்திரமதி: புருஷ: புனரீக்ஷதே வ்யபகதத்விதயம் பரமம் பதம் (2. 89.)

மைக்ய த்ருஷ்டி) என்று இவ்விதமாக அத்வைதிகள் மூன்று த்ருஷ்டிகளைச் சொல்லுவதைப்போல்-பௌத்தர்களும்-(1) அதம சீடர்களை (மூடசீடர்கள்) ஆரம்பத்திலேயே எல்லாம் ஶூன்யமென்று சொன்னால் ஒப்புக்கொள்ள மாட்டார்களென்கிற அபிப்ராயத்தினால் அந்த மூடரான சீடர்களுக்காக—தோன்றும் (காணப்படும்) பாஹ்ய பதார்த்தங்கள் ஸத்யமானவை, க்ஷணிகமானவை என்று சொல்லும் ஸௌத்ராந்திக வைபாஷிக மதத்தைச் சொல்லி, க்ரமக்ரமமாகக் கடைசியில் எல்லாம் ஶூன்யமே என்று பர்யவஸானம் செய்திருக்கிறார்கள். (2) மத்யம சீடர்களுக்காக—பாஹ்ய ஜகத்தெல்லாம் கல்பிதமானது, விஞ்ஞான மொன்றே தத்வமென்று சொல்லிக்கொண்டே, எல்லாம் ஶூன்யமென்று பர்யவஸானம் செய்திருக்கிறார்கள். (3) உத்தமமான சீடர்களுக்காக ஆரம்பத்திலேயே ஶூன்யமொன்றே தத்வம். அந்த ஶூன்யத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதமானது, ஸ்வப்னத்தைப்போல் பொய்யானது என்று சொல்லிக்கொண்டிருப்பதால், விஞ்ஞான வாதிமதமும் ஶூன்யவாதிமதமும் ஒன்றே. அந்த ஶூன்யவாதி மதமும், அத்வைதமதமும் ஒன்றேயாகையினால், விஞ்ஞானவாதி மதமும் அத்வைதமதமும் ஒன்றேயாகிறது.

இதுவேயல்லாமல்—விஞ்ஞானம் ஸத்யமானது (தத்வம்). அந்த விஞ்ஞானத்தில், பாஹ்யமான எல்லா ஜகத்தும் கல்பிதமானது என்கிற விஞ்ஞானவாதிகளான பௌத்தரின் தத்வங்களையே அத்வைத ஶாஸ்த்ரங்களுக்கு முதல் ப்ரவர்த்தகரான கௌடபாதாசார்யர், சங்கராசார்யர், பஞ்சபாதிகாகாரர், விவரணகாரர், தத்வதீபனகாரர் முதலான எல்லா அத்வைதிகளும் ஒப்புக்கொண்டிருப்பதினால் இந்த அத்வைதமதம் விஞ்ஞான வாதிகளான பௌத்தரின் மதமே. அதைப்போலவே அவைதிகமானது. வைதிகர்களான ஆஸ்திகர்கள் இத்தகைய அவைதிகமான அத்வைதமதத்தை வைதிகமதமென்று ப்ரமையினால் ஆஶ்ரயித்து—"மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்" (கீதா 16-20.) என்று கீதையில் சொல்லியிருப்பதைப் போல் பரமாத்மனை யடையாமலே அதோகதியை யடைவார்கள். ஆகையால் அவர்களின்க்ஷேமத்திற்காக (1) இந்த அத்வைதமதம்

அவைதிகமான பௌத்தமதமே என்றும், (2) இந்த அத்வைதமதத்தை வைதிகமதமென்று உபதேசிக்கக்கூடாதென்றும் கோர்ட்டார் தீர்மானித்து, டிக்ரீ கொடுக்கவேணுமாய் ப்ரார்த்திக்கிறோம்.

## ப்ரதிவாதி வக்கீல் ஆர்க்யுமெண்ட்.

பி. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! யத்யபி-பௌத்தர்கள் உத்தம மத்யமாதம சீடர்களைக்குறித்து வெவ்வேரு மதங்களை உபதேசித்திருப்பதைப்போல் காட்டியிருந்த போதிலும்; முதல் இரண்டுமதங்களும் ஸர்வ ஶூன்யதையிலேயே எப்படி பர்யவஸிக்கின்றனவோ, அப்படியே. அத்வைதிகளும், உத்தம மத்யமாதம சீடர்களைக்குறித்து அவரவர் புத்தியை அனுஸரித்து பரிணாமத்ருஷ்டி விவர்த்தத்ருஷடி, த்வைதோபஶமத்ருஷ்டி என்கிற இவைகளை உபதேசித்திருப்பினும், மற்றும் அந்த முதல் இரண்டு த்ருஷ்டிகளையும் த்வைதோபஶமத்ருஷ்டியிலேயே பர்யவஸானம் செய்திருந்தபோதிலும், விஞ்ஞானவாதிகளைப்போல் ஞானமொன்றே தத்வம், அந்த ஞானத்தில் எல்லா ஜகத்தும் கல்பிதமானது, ஸ்வப்னத்தைப்போல் பொய்யென்று ஒப்புக்கொண்டிருந்தாலும், இதர அநேகவிஷயங்களில் பௌத்தமதத்திற்கும், அத்வைத மதத்திற்கும் பேதமிருப்பதினால், அத்வைதமதமும் பௌத்தமதமும் ஒன்றேயாகிறதில்லை. அத்வைத மதத்திற்கும், பௌத்தமதத்திற்கும் சில விஷயத்தில் ஸாம்யமிருந்தமாத்ரத்தினால்,—அத்வைதமதம் பௌத்தமதமாயின், ஒவ்வொரு மதத்திலும் மற்றொரு மதத்திலிருக்கும் சில விஷயங்களில் ஸாம்யமிருந்தே யிருக்கும். அதுமாத்திரத்தினாலேயே எல்லாமதங்களும் ஒன்றேயாகவேண்டியதாகும். ஆகையால் அத்வைத மதத்திற்கு சில அம்சத்தில் பௌத்தமதத்துடன் ஸாம்யமிருந்தமாத்திரத்தினால் அவ்விரண்டு மதங்களும் ஒன்றேயாகிறதில்லை. பௌத்தரின் விஞ்ஞானம் க்ஷணிகம். (க்ஷணிகத்வமுடையது)மற்றும் அனேகமானது.(அநேகத்வத்தையுடையது) வேதாந்தத்தினால் அறிவதற்கு யோக்யமானதல்ல. அத்வைதிகளின் விஞ்ஞானம் (ப்ரஹ்மம்) நித்யமானது (நித்யத்வமுடையது) மற்றும்

ஒன்றே (ஏகத்வமுடையது) வேதாந்தத்தினலேயே அறிவதற்கு யோக்யமானது. பௌத்தர்கள் ஸ்வர்க்காதிகளேயும், புண்யபாபங்களேயும் ஒப்புக்கொள்ளுவதில்லே, நாங்கள் (அத்வைதிகள்) ஸ்வர்க்காதிகளேயும் புண்யபாபங்களேயும் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆகையால் அத்வைதமதம் பௌத்தமதத்தைவிட வேறுனது.

இந்தவாதி த்வேஷத்தினல் நம்மிட மதத்திற்கு அவைதிகமான பௌத்த மதத்துடன் ஸாம்யத்தைச் சொல்லுகிறுாகையால் கோர்ட்டார் வாதிக்கு எவ்விதமான அனுகூலமும் செய்யாமல் கேஸ் தள்ளிவிடுவதற்காக ப்ரார்த்திக்கிறோம்.

## வாதி வக்கீல் ரீஆர்க்யுமெண்ட்.

வா. வ:—(To the Court) தர்மராஜப்ரபோ! பௌத்தரின் விஞ்ஞானம் க்ஷணிகமானது. (க்ஷணிகத்வதர்மமுடையது) அநேகமானது. (அநேகத்வமுடையது) என்பது பொய்.

அத்வைதிகளின் ப்ரஹ்மமும் (விஞ்ஞானமும்) வேதாந்தத்தினல் தெரிந்துகொள்ளுவதற்கு யோக்யமானது. மற்றும் நித்யமானது (நித்யத்வமுடையது) ஒன்றேயானது (ஏகத்வமுடையது) என்பது பொய். மற்றும் இத்தகைய பேதக தர்மங்களினல் சொல்லும்பேதம் ப்ரக்ருதம் அனுபயுக்தமானது.

அத்வைதிகளின் ப்ரஹ்மம் (ஞானம்) நிர்விசேஷ (ஸகலதர்மரஹித) மான்தால் அத்வைதிகளின் ஞானத்தில் வேதாந்த வேத்யத்வம் இல்லே, ஏகத்வமில்லே, நித்யத்வமுமில்லே.

அத்வைதிகள் சப்தங்கள் முக்ய வ்ருத்தியினலாவது, அமுக்ய வ்ருத்தியினலாவது ப்ரவ்ருத்தமாவதற்குக் காரணமான நாமரூபகுண கர்மபேத ஸம்பந்தம் முதலிய எந்த தர்மங்களேயும் ப்ரஹ்மத்தில் அங்கீகரிப்ப தில்லாததினுலும்; மற்றும் அவாளிட ப்ரஹ்மம், ஸ்வப்ரகாசம் = இதரப்ரமாணங்களினல் அஞ்ஞேயம் (அறியப்படுவதற்கு அயோக்யம்) என்று அங்கீகரித்திருக்கிறபடியினலும், பௌத்தர்களின் விஞ்ஞானத்தைப்போலவே அத்வைதிகளின் ப்ரஹ்மமும் வேதாந்தத்தினல் தெரிவதற்கு அனர்ஹமே.

ஏகத்வம் அவித்யா கல்பிதமானதால் அது தங்களிட ப்ரஹ்மத்தில் இல்லை என்று சங்கராசார்யர் 'நவா கேவலத்வம்' என்கிற ஶ்லோகத்தினால் சொல்லியிருக்கிறார்.

பௌத்தரின் விஞ்ஞானம் நிர்விசேஷம் (ஸகல தர்மரஹித). ஆகையால் அந்த விஞ்ஞானத்திலும் க்ஷணிகத்வமுமில்லை, அநேகத்வமுமில்லை. ஆகையால் அவ்விருவர்களின் விஞ்ஞான தத்வங்களில் பேதம் வருகிறதில்லை.

ப்ரஹ்மத்தில் ஏகத்வ தர்மமும் நித்யத்வதர்மமும் இல்லாவிடினும்—ப்ரஹ்மம் ஏகத்வ நித்யத்வ ஸ்வரூபமானது. விஞ்ஞானத்தில் க்ஷணிகத்வதர்மம் இல்லாவிடினும் அது க்ஷணிகத்வஸ்வரூபம், அநேகத்வதர்மம் இல்லாவிடினும், அநேகத்வ ஸ்வரூபமுடையது என்று சொல்லுவது பொருந்தாது. ஏனெனின்:—ஏகத்வம் அவித்யா கல்பிதமானது (பொய்) என்று அத்வைதிகளே சொல்லியிருப்பதினால், அவித்யா கல்பிதமான (பொய்யான) ஏகத்வம் அவித்யா கல்பிதமாகாத (ஸத்யமான) ப்ரஹ்மஸ்வரூபமாகிறதென்பது மிகவும் அஸம்பாவிதமானது.

ஸகலகால வ்ருத்தித்வம் (எல்லா காலத்திலுமிருப்பது) என்கிற நித்யத்வம் ஸகண்டமாகையால் (அநேக பதார்த்தங்களுடன் கூடினதாகையால்) அகண்டமான ப்ரஹ்ம ஸ்வரூபமாகிறதில்லை. இவ்விதமாகவே ஏகக்ஷண வ்ருத்தித்வம் (ஒருக்ஷணத்திலிருப்பது) என்கிற ஸகண்டமான க்ஷணிகத்வம் அகண்டமான ஞானஸ்வரூபமாகிறதென்பது பொருந்தாது. கல்பிதமான அநேகத்வம் ஸத்யமான ஞானஸ்வரூபமாகிறதென்பது பொருந்தாததினால் நித்யத்வம், ஏகத்வம் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபமென்றும்; க்ஷணிகத்வம், அநேகத்வம் பௌத்தர்களின் விஞ்ஞானத்தின் ஸ்வரூபமென்றும் சொல்லுவது பொருந்தாததினால் அந்த விஞ்ஞானங்களுக்குப் பேதம் பொருந்தாது.

பௌத்தர்களிலும் விஞ்ஞானம் நித்யமென்று சொல்லுபவர்களிருக்கிறார்களென்று அத்வைதிகளின் க்ரந்தங்களினாலும், பௌத்தரின் க்ரந்தங்களினாலும் ஸித்திக்கிறபடியால் பௌத்தமதமும் அத்வைதமதமும் ஒன்றேயாகிறது.

பௌத்தரின் விஞ்ஞானம் அநித்யம், அத்வைதிகளின் விஞ்ஞானம் நித்யமென்று ஒப்புக்கொண்டபோதிலும் நாஸ்திகர்களைப் போலவே ப்ராஹ்மணவர்ணம், யஞ்ஞம், ஸ்நாநம், ஸந்த்யா, வேத, இத்த பரலோக புண்யபாபம் முதலானவைகளெல்லாம் பொய்யென்று சொல்லுவதினால் 'நஹி ஸ்வப்னஸூகாத்யர்த்தம் தர்மே கஶ்சித் ப்ரவர்த்ததே' என்று சொல்லியிருப்பதைப்போல், ஆஸ்திகர்களைப்போலவே ஸ்நாந ஸந்த்யா வேதாத்யயன பகவத்பூஜாதிகளைச்செய்வது பொருந்தாது. ஆகையால் இத்தகைய அல்பமான வைஷம்யம் அந்த மதத்திற்கு வைதிகத்வத்தை ஸித்தப்படுத்தாது. இத்தகைய மதத்தை ஆஶ்ரயித்திருக்கும் அத்வைதிகள் ஆஸ்திகர்களும் வைதிகர்களும் அல்ல. இப்படியிருந்தபோதிலும் யஞ்ஞம், வேதாத்யயனம், பகவத்பூஜாதிகளைச் செய்யும் ஆஸ்திக ஜனங்கள் தம்மிடமதம் ஆஸ்திகமதமென்று தெரிந்துகொண்டு அதை ஆஶ்ரயிப்பதற்காக அவர்களை மோசம் செய்வதற்காகச் செய்கிறார்கள். பௌத்தர்களும் ஸ்வர்க்காதிகள் மித்யை என்று தெரிந்துக்கொண்டிருந்த போதிலும் 'ஸ்வர்ககாமஶ் சைத்யம் வந்தேத' என்கிற வாக்யங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு ஸ்வர்க்கம் முதலிய பலன்களை அடைவதற்காக புண்யகர்மங்களை அத்வைதிகளைப்போல் செய்துக் கொண்டிருப்பதினால், ஸ்வர்க்காதி லோகங்களை ஒப்புக்கொள்ளுவது, அதற்காக புண்யகர்மங்களைச்செய்வது, இவ்விஷயங்களில் இரண்டு மதங்களுக்கும் பேதமில்லை.

ஆகையால்:—ஆஸ்திக ஜனங்கள் இந்த அவைதிகமான அத்வைதமதத்தை வைதிகமதமென்று ப்ரமித்து அதை ஆஶ்ரயித்து அதோகதியை அடையாமலிருப்பதற்காகக் கோர்ட்டார் இந்த அத்வைதமதம் அவைதிகமான பௌத்தமதமே என்றும், அம்மதத்தை வைதிகமென்று அவர்கள் உபதேஶிக்கக் கூடாதென்றும், மற்றும் பாரமார்த்திக ஸத்யமான ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத் யாஶ்ரமங்கள், ஸ்நான, ஸந்த்யா, யஞ்ஞதேவதைகள், வேதம், ஸ்வர்க்காதி பரலோகங்கள் முதலான எல்லா ஜகத்துக்கும் ஸ்ருஷ்டிகர்த்தாவும், ரக்ஷகனும் ஆகிய பரமாத்மனை

ஸர்வஞ்ஞத்வாதி ஸமஸ்த கல்யாணகுண பூர்ணன், ஜீவஜடாத்மக ப்ரபஞ்சத்தைவிட பின்னன், மோக்ஷாதி புருஷார்த்தங்களை கொடுப்பவன் என்று தெரிந்துக்கொண்டு, அப்பரமாத்மனைக் குறித்து யஞ்ஞாதி கர்மங்களைச் செய்துக்கொண்டே, சுத்தாந்த: கரணராய் அந்த பரமாத்மனை ஞானானந்தாதி குணங்களை ஸ்ரவண மனன த்யானங்களைச் செய்து, அவனிட அபரோக்ஷஞானத்தை ஸம்பாதித்துக்கொண்டு, அனுக்ரகத்தினால் (ப்ரஸாதத்தினால்) இவ்வுலகத்தில் அபேக்ஷிதமான புருஷார்த்தங்களை யடைந்து, ப்ரக்ருதி பந்தத்தினின்றும் முக்தராய், வைகுண்டாதி லோகங்களில்—'ஸ ஏகதா பலதி ஸபஹுதாபவதி' 'ஜக்ஷன் க்ரீடன் ரமமாண!' 'ஸயதி பித்ருலோககாமோ பவதி ஸங்கல்பாதே வாஸ்ய பிதர: ஸமுத்திஷ்டந்தி' 'அனாவ்ருத்திஸ் ஸப்தாதனாவ்ருத்திஸ் ஸப்தாத்' 'ஸர்வான் காமானாப்த்வா அம்ருதஸ்ஸம்பவத்' 'இமம் மானவமாவர்தம் நாவர்தந்தே' 'காமான்னீ காமரூப்யனு ஸஞ்சரன் ஏதத்ஸாம காயன்னாஸ்தே' இவை முதலிய ஸ்ருதிகளில் சொல்லியவாறு, தன்னிச்சானுஸாரமாக நானா ரூபங்களையடைந்துக்கொண்டே, வேண்டும்போது பித்ருகளை முதலியவர்களைப் பார்த்துக்கொண்டு, அபேக்ஷிதமான போகங்களை அனுபவித்துக்கொண்டே, மறுபடியும் இவ்வுலகத்திற்கு வந்து ஜனனமரணாதிகளை யடையாமல், ஸாமகானத்தினால் பரமாத்மாவின் குணங்களைத் துதித்துக்கொண்டே, நித்ய ஸுகிகளாய் இருக்கவேண்டும் என்று சொல்லும் த்வைதமதமே வைதிகமதமென்றும், இவ்வைதிகமான த்வைதமதத்தின்படிக்கு ஆசரித்து, எல்லா ஜனங்களும் ஸுகத்தை அடையவேண்டியதென்றும், மற்றும் ப்ரபுக்களின் சித்தத்திற்கு ஏதேது உசிதமென்று தோன்றுகின்றனவோ அந்தப்படிக்கு தீர்மானித்து டிக்ரீ கொடுக்கவேணுமாய்க் கோருகிறோம்.

---

# இப்புத்தகம்

பெங்களூர் பஸவன்குடி போஸ்ட்

உத்திராதிமடம் பில்டிங்க்ஸ்

எஸ். எம். எஸ். ஏ. ஸபை லைப்ரேரியன்

வி. என். தேசிகாசார்யாரிடத்திலும்,

மதராஸ் திருவல்லிக்கேணி சிங்கராசாரி தெருவு,

13 நெ. உத்திராதி மடத்திலிருக்கும்

எஸ். ராமாசாரியாரிடத்திலும் கிடைக்கும்.